



# இஸ்லாத்தில்
# இடைச் செருகல் வேண்டாம்!


அபூபக்கர் அப்துல்லாஹ் அல் ஜஸாயிரி

தமிழில்
ஏ.எஸ். முஹம்மத் நிஸ்தார் பீ.ஏ. (நளீமி)



Kingdom of Saudi Arabia
**The Cooperative Office For Call And Guidance To Communities at Um Al-Hammam**
**Under the Supervision of the ministry of Islamic Affairs Endowment Guidance & Propagation**
Tel. 4826466 Fax 4827489 - P.O. Box 31021 Riyadh 11497

TAMIL 3

# இஸ்லாத்தில் இடைச் செருகல் வேண்டாம்!



அபூபக்கர் அப்துல்லாஹ் அல் ஜஸாயிரி

தமிழில்
ஏ.எஸ். முஹம்மத் நிஸ்தார் பீ.ஏ. (நளீமி)

வெளியீடு:
அழைப்பு, வழிகாட்டல்களுக்கான கூட்டுறவுச் செயலகம்
(உம்முல் ஹமாம்)
ரியாத் - சவூதி அரேபியா.

# உள்ளடக்கம்

# فهرس الموضوعات

| الموضوع | الصفحة |
| --- | --- |


***

# முன்னுரை

அகிலத்தின் இரட்சகன் அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும் எமது நபி இறுதித் தூதர், ரஸூல்மார்களின் தலைவர் முஹம்மத் (ஸல்) அவர்கள் மீதும் அவரைச் சேர்ந்தவர்கள் அவரது தோழர்கள் அனைவர் மீதும் ஸலாத்தும் ஸலாமும் என்றென்றும் உண்டாவதாக. நூதனங்கள் நூதனங்களையேற்படுத்துதல் பற்றி கவனம் செலுத்துவதும் அதனை விளங்குவதும் அதுபற்றி எச்சரிப்பதுவும் அதை பிறருக்கு எடுத்துக் கூறுவதும் இன்றியமையாத ஒன்றாகும்.

நூதனங்களை தோற்றுவிப்பதும் முஸ்லிம்களுக்கு மத்தியில் நூதனங்களை ஏற்படுத்தும் ஒரு பெரும் தீமையாகும். மார்க்கத்தில் நூதனங்களை ஏற்படுத்துவதன் தீமையையும் அதன் பயங்கர விளைவுகளையும் அறிந்து கொள்வதற்கு பின்வரும் மூன்று உண்மைகளும் எமக்கு துணைபுரிகின்றன.

### *முதலாவது உண்மை:*

மனித புத்திக்கு நல்லதையும் கெட்டதையும் பிறித்தறிவதற்குரிய சுதந்திரம் கிடையாது. எதனையும் பகுத்துணர்வதற்கும் சுதந்திரம் கிடையாது. இது மனித புத்தியின் குறைபாடாகும். அதனது ஆற்றலின்மையாகும். இன்னொருவகையில் அது மனோ இச்சையுடன் தொடர்புடையது; உணர்வுகளும் உணர்ச்சிகளும் அதனைத் தடுக்கின்றது.

இந்த வகையில் பிரயோசனமானது எது தீமை பயக்கக் கூடியது எது என்பதனையும் அழகானவற்றையும் அலங்கோலமானவற்றையும், சிறந்தவற்றையும் கெட்டவற்றையும் தெளிவான முறையில் பிறித்தறிவதற்கு - குறைபாடு, பொடுபோக்கு, மறதி, அறியாமை போன்ற அனைத்தினின்றும் தூய்மையான இறை வஹியின் வழிகாட்டல் இன்றியமையாத தேவையாகும்.

மனிதனது மனோ இச்சையின் தாக்கங்கள் அவனையும் அவனது அறிவையும் சூழ்ந்து மறைத்துக் கொண்டுள்ளன. இதுவே அவனது அறிவீனத்திற்கும், மடமைத்தனத்துக்கும் அநியாயங்களுக்கும் காரணமாகும். இந்நிலையில் இருந்து விடுபட விரும்புகின்ற மனிதன் அனைத்து யதார்த்த நிலமைகளையும் உண்மைகளையும் இறைவஹியின் ஒளியூடாக பார்க்க அவதானிக்கக் கடமைப்படு கின்றான். மேலும் அதனூடாகவே அனைத்திலும் உள்ள நன்மை, தீமைகளையும்; நல்லது, கெட்டதையும்; அழகான அலங்கோலமா னவற்றையும் வெறுக்கக் கூடியவற்றையும் பிரித்தறிய வேண்டும். அதனால் மட்டுமே அது சாத்தியமானதும் கூட.

மனித அறிவு அவன் பார்க்கும் கண்ணுக்கு நிகரானது. ஒளி இருக்கின்ற போது தான் கண் அதனது சக்திக்கேட்ப பொருட்களைப் பார்க்கின்றது. மாற்றமாக ஒளி இல்லையெனின் பார்க்கும் சக்தி பெற்ற கண்கூட பார்க்கும் சக்தியினை இழந்து விடுகின்றது. இது சாதாரண உண்மை. எவரும் அறிந்த உண்மை. ஒவ்வொரு மனிதனும் இதனை அறிந்தே வைத்துள்ளான்.

இந்த மனிதனது கண்ணைப் போன்றுதான் அவனது அறிவும் காணப்படுகின்றது. அதற்கு அல்குர் ஆன் சுன்னா ஆகியன இறைவழிகாட்டல் கிடைக்கின்ற போது அது அனைத்தையும் அவற்றின் உண்மை நிலையில் பெற்றுக் கொள்கின்றது. எது எவ்வாறு இருக்கின்றதுவோ அதனை அவ்வாறே பார்க்கின்றது. சாதக பாதகங்களையும் நன்மை தீமைகளையும், மோசமானது எது, சிறந்தது எது, என்பதனையும் தெளிவாக அறிந்து கொள்கின்றது. எனவே, எவனிடம் அறிவும், ஈமானும் ஒன்றினைந்து காணப்படுகின்றதுவோ அவனது நன்மைகள் அதிகரிக்கும்; பிழைகளும் தவறுகளும் குறைந்துவிடும். அவன் இறைவழிகாட்டலின் ஒளியில் வாழத் தலைப்பட்டு விடுகின்றான். இறைவழிகாட்டலைப் பெறாத அதனை தடுத்துக் கொண்ட ஒருவனது அறிவு, புத்தி இதற்கு மாற்றமானது. எதற்கும் அவன் அல்குர்ஆனையோ சுன்னாவையோ அணுக மாட்டான். அவையிரண்டிலும் உள்ள ஏவல்களை ஏற்று விலக்கல்களை தவிர்ந்து கொள்ளவும் மாட்டான். எனவே, அவன் செய்யும் நன்மைகளை விட அவனிடம் தீமைகளும் தவறுகளும் அதிகமாகக் காணப்படும். அவன் மடமையின் மனோ இச்சைகளின் இருளில் தீமைகளில் வாழ்ந்து கொண்டிருக்கும் போது தீமைகள் பிழைகள் தவறுகளை விட்டு அவன் எவ்வாறு விடுபட முடியும்?

அப்படியே அவன் அந்த இருளிலிருந்து அல்லது குறிப்பிட்ட ஒரு தீமையிலிருந்து விடுபட்டாலும் மற்றொரு தீமையின் பக்கமே போய்ச் சேர்கின்றான். இந்நிலையில் இருக்கும் அவனுக்கு எவ்வாறு விளக்கம் கொடுக்க முடியும்? எவ்வாறு நேரான வழியின் பக்கம் அவனை இட்டுச் செல்ல முடியும்?

***இரண்டாவது உண்மை:***

இந்த முஸ்லிம் சமூகத்தின் நிறைவு, சிறப்பு, விமோசனம் போன்றவற்றின் ஊற்றாகிய அதனது தீனை அல்லாஹ் பூரணப்படுத்தி வைத்துள்ளான். எனவே, எந்நிலையிலும் எக்காலத்திலும் அதில் எதனையும் கூட்டுவதற்கோ, குறைப்பதற்கோ எதுவித தேவையும் இல்லை. இதுபற்றி அல்லாஹ் இவ்வாறு கூறுகின்றான்.

**''இன்றைய தினம் உங்களுக்காக உங்கள் மார்க்கத்தை பூரணமாக்கி விட்டேன். மேலும் நான் உங்கள் மீது என் அருட்கொடையைப் பூர்த்தியாக்கிவிட்டேன். இன்னும் உங்களுக்காக நான் இஸ்லாம் மார்க்கத்தையே (இசைவானதாக) தேர்ந்தெடுத்துள்ளேன்.''**

(அல்குர்ஆன் 5:3)

எனவே, அந்த தீன் பெறவேண்டியிருந்த அனைத்து சிறப்பம்சங்களையும் நல்லம்சங்களையும் சுட்டிக் காட்டும் வரை, அதற்கு எதிரான அனைத்து தீமைகளையும் எச்சரிக்கும் வரை, அதன் நபியாகிய முஹம்மத் (ஸல்) அவர்களது உயிர் கைப்பற்றப்படவு மில்லை. இதன் உண்மை நிலைக்கு அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கும் ஹதீஸ் போதிய சான்றாகும்.

**''மலசலம் கழித்துவிட்டு எவ்வாறு சுத்தம் செய்ய வேண்டும் என்பதனைக் கூட ரஸூல் (ஸல்) அவர்கள் எமக்கு கற்றுத் தந்தார்கள்.''**

-புஹாரி.

மதீனாவின் அறிஞர் என வர்ணிக்கப்படுகின்ற இமாம் மாலிக் இப்னு அனஸ் அவர்கள் அபூஹுரைரா (ரலி) அவர்களது கூற்றை உறுதிப்படுத்தும் வகையில் கீழ்வருமாறு கூறுகிறார்.

**''ரஸூல் (ஸல்) அவர்களது காலத்தில் எவையெல்லாம் தீனாக, மார்க்கமாக இருக்கவில்லையோ அவை அதுவும் இன்று மார்க்கமாக இருக்க முடியாது.''**

மேலும்,

**''எவர் இஸ்லாத்தில் புதியதோர் அம்சத்தை தோற்றுவித்து விட்டு நல்லது எனக் கருதுகிறாரோ நிச்சயமாக அவர் முஹம்மத் (ஸல்) அவர்கள் தனது தூதை எத்தி வைப்பதில் மோசடி செய்து விட்டார்.''**

எனக் கருதுகின்றார். ஏனெனில் அல்லாஹ் இவ்வாறு கூறுகின்றான். **''இன்றைய தினம் உங்களுக்காக உங்களது மார்க்கத்தை பரிபூரணமாக்கி விட்டேன். மேலும் நான் உங்கள் மீது என் அருட்கொடைகளை பூர்த்தியாக்கி விட்டேன். இன்னும் உங்களுக்காக நான் இஸ்லாம் மார்க்கத்தையே (இசைவானதாக) தேர்ந்தெடுத்துள்ளேன்.''**

(அல் குர்ஆன் 5:3)

***மூன்றாவது உண்மை:***

தீன், மார்க்கம், ஷரீஆ இவையனைத்தையும் மனிதனின் நிறைவுக்காகவும் சிறப்புக்காகவும், மேன்மைக்காகவுமே அல்லாஹ் அமைத்துத் தந்துள்ளான். அவற்றை அல்லாஹ் எந்த நோக்கத்திற்காக வைத்தானோ அவற்றின் முடிவுகளுக்கு மாறுபடாத வழிகாட்டலின் அமைப்பாக அமைத்துள்ளான். அந்த வகையிலேயே நெருப்பு எரிகின்றது; இரும்பு துண்டிக்கின்றது; நீர் தாகத்தைப் போக்குகின்றது. அவ்வாறே தான் அல்லாஹ் உளரீதியான, பேச்சு ரீதியான, செயல் ரீதியான வணக்கங்களை அமைத்துள்ளான்; ஷரீஅத்தாக்கியுள்ளான்.

எனவே, அவைகள் எவ்வாறு நிறைவேற்றப்பட வேண்டும் என இஸ்லாம் மனிதர்களிடம் எதிர்பார்க்கின்றதுவோ அவ்வகையிலேயே அவை நிறைவேற்றப்பட வேண்டும். அப்போது தான் அவற்றினால் உள்ளம் தூய்மை பெறுகின்றது; நடத்தைகளும் பண்புகளும் ஒழுங்கு பெறுகின்றன; ஆத்மா சீரடைகின்றது. இது போன்றே அதன் ஏனைய பிரதிவிளைவுகளும் மாறுபடாதிருக்கும்; ஆனால், மனித சட்டங்கள் அல்லது அவன் தோற்றுவிக்கும் புது அம்சங்கள் நூதனங்கள் இதற்கு மாற்றமானவையாகும். அவற்றை மனிதன் எதற்காக எதனை எதிர்பார்த்து தோற்றுவிக்கின்றானோ அந்த எதிர்பார்ப்பை, முடிவை அவை தரவல்லவையன்று. அவை சக்தியற்றவை; மார்க்கத்தின் பெயரால் தோற்றுவிக்கப்படும் எவ்வித புதிய அனுஷ்டானங்கள் சட்டங்கள் செயற்பாடுகளாயினும் அவற்றால் பண்புகளின் ஒழுங்கமைப்பு, உளத்தூய்மை, ஆத்ம சீர்திருத்தம் என்பனவற்றை

எதிர்பார்க்க முடியாது. ஏனெனில் எந்நிலையிலும் அவை எத்தகைய ஒன்றையும் பிரதிபலனாக தரமாட்டாது. மேலும், மனிதனின் இன்றியமையாத அம்சங்களான உடல், புத்தி, கண்ணியம், கௌரவம், செல்வம், தீன் இவைகளைப் பாதுகாக்கக் கூடிய எத்தகைய ஆற்றலும் சக்தியும் மனித சட்டங்களுக்குக் கிடையாது. அவற்றில் ஏதாவது ஒன்றை அது உண்மைப்படுத்துவதாயின் உறுதிப்படுத்துவதாயின் அது மிக அரிதானதே. இதற்கு மனிதர்களது நடைமுறை வாழ்க்கை சான்று பகர்கின்றது. உண்மையில் இஸ்லாத்தின் பெயரால் மார்க்கம் என்பதன் அடிப்படையில் தோற்றுவிக்கப்பட்ட நூதனங்களை யார் பின்பற்றுகின்றார்களோ, அவர்களது ஆத்மாக்கள் மாசுபடிகின்றன; உள்ளங்களிலே இருள் அதிகரிக்கின்றது. அவ்வாறே அந்நூதனங்கள் அவர்களது பண்புகளிலும் நடத்தைகளிலும் மாற்றத்தையேற்படுத்து கின்றன. இதைத் தவிர வேறு எதுவித மாற்றத்தையும் அவர்களில் காணமுடியாது.

மனிதர்களது உயிர், கண்ணியம், கௌரவம், செல்வங்கள் அனைத்தும் பாதுகாக்கப்பட வேண்டும் என்பதற்காக முன் வைக்கப்பட்ட மனித சட்டங்களும் அவ்வாறுதான். இத்தகைய சட்டங்கள் மனிதர்களால் பின்பற்றப்பட்டு அவர்களது நாடுகளிலும் நடைமுறைப்படுத்தப்பட்டன. நடைமுறைப்படுத்தப்பட்டுக் கொண்டிருக்கின்றன. என்றாலும் குறிப்பிடக்கூடிய எத்தகைய மாற்றத்தையும் அவர்களிலோ அந்த சமூகத்திலோ காணமுடியாது. மாற்றமாக இரத்தம் ஓட்டப்படுகின்றது; கண்ணியமும் கௌரவமும் அழிக்கப்படுகின்றன; செல்வங்கள் களவாடப்பட்டு சூரையாடப்படு கின்றன; மனித சட்டங்கள் பின்பற்றப்படுகின்றன, நடைமுறைப்ப டுத்தப்படுகின்றன அனைத்து நாடுகளிலும் நிலை இதுவே. எனினும் இறை சட்டங்களை பின்பற்றுகின்ற நாடுகள் இவற்றிக்கு மாறான தூய நிலையையே பெறும். இவ்வுண்மைக்கு சவுதி அரேபியா நல்லதொரு சான்றாகும்.

இந்த எதார்த்த பூர்வமான மூன்று உண்மைகளின் ஒளியில் நூதனங்களையும் அதனது தாக்கங்களையும் அறிந்து கொள்வோம். நூதனங்களுக்கு கொடுக்கின்ற வரைவிலக்கனத்திலிருந்து இதனை ஆரம்பிப்போம்.

# பித்அ (நூதனம், புதியவை)

புதிதாக ஒன்றைத் தோற்றுவித்தல் கண்டுபிடித்தல் என்பன அரபு மொழியில் '**பித்அ**' என அழைக்கப்படுகின்றது. அதனை ஏற்படுத்தக் கூடியவன் "**முஃப்திஉன்**" என்றும், அதனை பின்பற்றுபவன் "**முஃப்ததிஉன்**" என்றும் அழைக்கப்படுகினறான். இந்த வினை யடியில இருந்து உருவான "**அல் பதீஉன்**" என்பது அல்லாஹ்வின் திருநாமங்களில் ஒன்றாகும். முன் எங்கும் இல்லாத ஒன்றை உருவாக்குபவன் என்பதுவே இதன் பொருளாகும்.

"**அல்லாஹ் வானங்களையும் பூமியையும் முன்மாதிரியின்றி இல்லாமையிலிருந்து தானே உண்டாக்கினான்.**"

(அல் குர்ஆன் 2:117)

"**அல்பதீஉன்**" என்பது அதற்கு முன் எதுவும் இருக்கவில்லை யென்ற கருத்தினையே கொடுக்கின்றது. அல்லாஹ் அவன்தான் முதலானவன். அவனுக்கு முன் எதுவும் கிடையாது. எனவே, அல்லாஹ்வைத் தவிர வேறு யாருக்கும் "**அல்பதீஉன்**" எனப் பெயரிடுவது கூடாது. அவ்வாறே "**அல்பித்உன்**" என்பதற்கு முதன் முதலாக இருந்தது அதற்கு முன் எதுவும் இருக்கவில்லையென்ற கருத்தையும் (அரபு மொழிவழக்கில்) கொடுக்கின்றனர். கீழ்க்காணும் வசனத்தில்

அல்லாஹ் இவ்வாறு கூறுகின்றான்.

"**இறைத் தூதர்களில் நான் புதிதாக வந்தவனல்லன்**"

(அல் குர்ஆன் 46:9)

அதாவது அனுப்பப்பட்ட தூதர்களில் நான் தான் முதலாவது அனுப்பப்பட்ட தூதரன்று. ஆனால், எனக்கு முன் அதிகமானவர்கள் அனுப்பப்பட்டுள்ளார்கள். எனவே, ஏன் எனது இந்தத் தூதை மறுக்கிறீர்கள் அல்லது இதனால் ஆச்சரியப்படுகிறீர்கள்.

மேலும், அரபு இலக்கியத்தில் வார்த்தைகளை அழகுற மொழிவ தற்கும் அழகாக அமைப்பதற்கும் "**அல்பதீஉன்**" எனப்படுகின்றது. அரபு இலக்கியத்தில் வருகின்ற மூன்று முக்கிய பகுதிகளில் இதுவும் ஒன்றாகும். (அல்மஆனி, அல் பயான், அல்பதீஉன்)

மேற்குறிப்பிட்ட அனைத்தும் அரபு மொழிவழக்கில் **"அல்பித்ஆ"** என்பதற்கு கொடுக்கப்படுகின்ற கருத்துக்களாகும். **"அல்பித்ஆ"** என்பதற்கு ஷரீஆவின் கண்ணோட்டத்தில் முன்னில்லாத அதாவது முன்மாதிரியாக இல்லாத ஒன்றை மார்க்கத்தில் தோற்றுவிப்பதாகும். இதுவே உண்மையான எதார்த்த பூர்வமான பித்அத்தாகும். அல்லது வணக்கம் அல்லாஹ்வை நெருங்குதல் என்ற நோக்கத்தில் இஸ்லாமிய ஷரீஆவுக்கு முரண்படும் வகையில் மார்க்கத்தில் புதிதாக ஒன்றைத் தோற்றுவித்தல் எனவேதான் **'பித்ஆ'** சுன்னாவுக்கு மாற்றமானதாக - எதிரானதாக உள்ளது. மற்றுமன்றி சுன்னா நேர்வழியாகவும் பித்ஆ வழிகேடாகவும் உள்ளது. சுன்னா இறை வஹியின் மூலம் உறுதியாக்கப்பட்ட ஷரீஅத்தான வழிமுறையாக இருக்கும் போது பித்அத்து அல்குர்ஆனிலோ சுன்னாவிலோ, இஜ்மாவிலோ (அறிஞர்களது ஏகோபித்த முடிவு) ஆதாரமாக இல்லாத புதிதாக தோற்றுவிக்கப்பட்ட வழிமுறையாகும்.

## மார்க்கத்தில் புதிதாக ஒன்றைத் தோற்றுவிப்பது பற்றிய இஸ்லாத்தின் தீர்ப்பு:

மார்க்கத்தில் புதிதாக ஒன்றைத் தோற்றுவிப்பது பித்அத்தாகும். அவ்வாறு தோற்றுவிப்பது அல்குர்ஆன், சுன்னா, இஜ்மா ஆகியவற்றின் அடிப்படையில் ஹராமாகும். ஏனெனில் இவ்வாறு புதிதாக தோற்றுவிப்பது அல்லாஹ் ஷரீஅத்தாக்கியதற்கு முரண்படக்கூடியதாகும். இது அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் விரோதம் செய்வதுவும் அவர்கள் இருவரையும் எதிர்ப்பதுவும் மூலம் ஒரு மனிதன் பாவம் செய்வதற்கு போதுமானதாகும். எனவே, இந்த வகையில் இச்செயல் இழிவுபடுத்தப்பட்டுள்ளது; விமர்சிக்கப்பட்டுள்ளது. அவ்வாறே அதனைச் செய்கின்றவனும் விமர்சிக்கப்பட்டுள்ளான். அதனது தீமைகள், ஆபத்துக்கள், தீயமுடிவுகள் பற்றி (இஸ்லாமிய) சமூகம் எச்சரிக்கப்பட்டுள்ளது.

அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான்.

**''அல்லது அல்லாஹ் அனுமதிக்காததை மார்க்கமாக்கி வைகக்கக் கூடிய இணை (தெய்வங்)கள் அவர்களுக்கு இருக்கின்றனவா? மேலும் (மறுமையில் விசாரணைக்கு பிறகு தக்க கூலி கொடுக்கப்படும் என்னும் இறைவனின்) தீர்ப்புப் பற்றிய வாக்கு இல்லாதிருப்பின் (இதுவரை) அவர்களுக்கிடையில் தீர்ப்பளிக்கப்பட்டிருக்கும்.''**

(அல் குர்ஆன் 42:21)

மேற்குறிப்பிட்ட இவ்வசனம் நூதனங்களைத் தோற்றுவிக்கின்றவர்களுக்கும் அவற்றைப் பின்பற்றுகின்றவர்களுக்கும் அச்சுறுத்தி எச்சரிப்பதாக உள்ளது. அவ்வாறே பித்அத்துகளை எடுத்து நடப்பதை; ஆகுமாக்குவதை மறுத்துரைப்பதற்கு ஆதாரமாகவும் உள்ளது. 'முஸ்லிம்' எனும் ஹதீஸ் தொகுப்பு நூலில் உள்ள 'அல் இர்பால் இப்னு ஸாரியா' எனும் ஸஹாபி அறிவிக்கும் ஹதீஸ் பித்அத் ஹரமானாது, இழிவானது, கண்டிக்கத்தக்கது என்பதற்கு போதிய சான்றாக உள்ளது. மேற்குறிப்பிட்ட நபித்தோழர் அறிவித்துள்ள ஹதீஸ் வருமாறு:

**"உங்களுக்கு புதியவற்றை (நூதனங்களை) நான் எச்ச ரிக்கின்றேன் நிச்சயமாக அனைத்து நூதனங்களும் புதியவை களும் பித்அத்தாகும். அனைத்து பித்அத்துகளும் வழிகேடாகும்."**

மேலும், ரஸூல் (ஸல்) அவர்கள் என்றும் எப்போதும் தனது பேச்சுக்களில் ஆரம்பத்தில் பின்வருமாறு கூறுகிறார்கள்.

**"வார்த்தைகளில் மிகவும் உண்மையானது அல்லாஹ்வுடைய வேத நூலாகும். வழிகாட்டலில் சிறந்தது முஹம்மத் (ஸல்) அவர்களது வழிகாட்டலாகும். விடயங்களில் மிக மோசமானது நூதனமானவைகளாகும். அனைத்து நூதனங்களும் பித்அத்தாகும். அனைத்து பித்அத்துகளும் வழிகேடாகும்."**

இது பித்ஆவுக்குரிய இழிவாகவும், அதற்குரிய தடையாகவும் அதிலிருந்து தவிர்ந்து கொள்வதற்குரிய எச்சரிக்கையாகவும் அதற்குரிய விமர்சனமாகவும் உள்ளது.

***பித்அத்தை மறுத்துரைத்தல்.***

பித்அத்தை மறுப்பதுவும் வெறுப்பதுவும் வாஜிபு என்பதில் எவ்வித சந்தேகமும் கிடையாது. அவற்றைக் கொண்டு செயல்படுவது மறுக்கப்படக் கூடியது. ஏற்றுக் கொள்ளத்தக்கதன்று. எனவே, இதுபற்றி வந்துள்ள ஹதீஸ்களில் சிலவற்றையும் அதனுடன் தொடர்புடைய நபித்தோழர்களது இஸ்லாமிய நவீன அறிஞர்களது கருத்துக்களையும் இங்கு தருகின்றோம்.

நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்:

**"யார் இஸ்லாத்தில் இல்லாத புதிய விடயங்களை அதில் ஏற்படுத்துகிறார்களோ அது மறுக்கப்படக் கூடியதாகும்."**

- முஸ்லிம்.

**"யார் நாம் ஏவாத ஒன்றைச் செய்கிறார்களோ அது ஏற்றுக் கொள்ளத் தக்கதன்று."**

மேற்குறிப்பிட்ட இரண்டு ஹதீஸ்களும் மார்க்கத்தில் ஏற்படுத்தக் கூடிய புதியவைகள் அனைத்தும் மறுக்கப்படக் கூடியது என்பதற்கு போதிய சான்றாகும். இஸ்லாத்தின் பார்வையில் தவிர்க்கப்பட் வேண்டியவைகள் தவறானவையும் பிழையானவையுமே இத்தீமைகளையும் தவறுகளையும் செய்வதால் யாதொரு நற்கூலியோ பிரதிபலனோ கிடையாது. எனவே, அத்தகைய செயற்பாடுகளை

மறுப்பதுவும் வெறுப்பதுவும் அவற்றைக் கொண்டு செயற்படாமல் இருப்பதுவும் கட்டாயக் கடமையாகும். இதனால் தான் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள் ஒவ்வொரு இஸ்லாமிய சமூகமும் அதன் தனி மனிதர்களும் சுன்னாவைப் பின்பற்ற வேண்டும் என்றும் நூதனமானவைகளை பித்அத்துகளை விடவேண்டுமென்றும் இஸ்லாமிய சமூகத்துக்கு உபதேசம் செய்தார்கள்.

**''நீங்கள் எங்களது அடிச்சுவடுகளைப் பின்பற்றுங்கள் புதியவைகளைத் தோற்றுவிக்க வேண்டாம். அதுவே உங்களுக்கு போதுமானது.''**

- அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத்.

மேலும் கூறினார்கள்:

**''சுன்னாவுடன் போதுமாக்கிக் கொள்வது அதனை விரும்புவது நாடுவது பித்அத்தில் இஜ்திஹாத் செய்வதை விட சிறந்தது.''**

ஒரு மனிதன் ஷரீஅத்தாக்கப்பட்ட சுன்னாவைப் பின்பற்றுவதன் மூலம் குறைவாக செயலாற்றுவது ஷரீஅத்தாக்கப்படாத சுன்னாவல்லாத பித்அத்தான செயற்பாடுகளைக் கொண்டு அதிகமாகச் செயல்படுவதை விடச் சிறந்தது. ஏனெனில் ஷரீஅத்தாக்கப்பட்டதை அவன் செய்கின்றபோது அவனுக்கு நன்மை கிடைக்கின்றது. ஒரு நல்ல செயலுக்கு பத்து மடங்கு நன்மை கிடைக்கின்றது. ஆனால் புதியவைகளை (பித்அத்துகளை) செய்கின்றபோது அவை செய்தவன் பக்கமே திருப்பிவிடப்படுகின்றது. அன்றி அவை ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை. அவற்றிக்கு அவனுக்கு நற் கூலியோ, நன்மையோ கிடைப்பதுவுமில்லை. அது ஒரு நற்செயலுமன்று, உள்ளத்தை தூய்மைப்படுத்தவும் மாட்டாது. ஆத்மாவையும் சுத்தப்படுத்தாது.

ஹுதைபதுல் யமானி எனும் நபித்தோழர் பித்அத்தை எச்சரித்துக் காட்டும் வகையில் ஆச்சரியமான ஓர் உதாரணத்தை பின்வருமாறு குறித்துக் காட்டுகின்றார்கள்:

> **''அவர் இரண்டு கற்களை ஒன்றுடன் ஒன்று உராய்ந்து விட்டு இவ்விரண்டுக்குமிடையில் வந்த ஒளியை நீங்கள் அவதானித்தீர்களா? எனக் கேட்டபோது. அபூ அப்துல்லாஹ்வே! நீங்கள் அதற்கிடையில் ஒரு மிகச் சிறிய வெளிச்சத்தையன்றி காணவில்லையே**

**என்றார்கள், நபித் தோழர்கள். அப்போது எனது ஆத்மா எவன் வசம் உள்ளதோ அவன் மீது ஆணையாக இந்த இரண்டு கற்களுக்குமிடையில் கண்ட ஒளியைப் போன்று உண்மையும் சத்தியமும் உலகில் அரிதாகி பித்அத்துகள் அவற்றை மிகைத்துவிடும் என்றும் அந்த பித்அத்திலும் சிலது விடுபடும் அளவுக்கு அதனை அதிகப்படுத்து வீர்கள் என்றும் கூறினார். பின் சுன்னா விடப்படுமா என நபித்தோழர்கள் கேட்டார்கள்''**

ஹஸனுல் பஸரி (ரஹ்) அவர்கள் பித்அத்தை எதிர்ப்பதிலும் அதனை எச்சரிப்பதிலும் அதனைச் செயற்படுத்துகின்றவர்களைச் சாடுவதிலும் கடுமையாக இருந்தார்கள். பித்அத்துகளை பின்பற்றுகின்றவனைப் பற்றி பின்வருமாறு கூறியுள்ளார்கள்.

**''பித்அத்துகளை செயற்படுத்துகின்றவர்களுடன் நட்புக் கொள்ளாதீர்கள். ஏனெனில் அவனது உள்ளம் நோய்வாய்ப்பட்டுள்ளது.''**

அவர்களுடன் நட்புக் கொள்வதனை அல்குர் ஆனும் கடுமையாக தடுக்கின்றது.

**''(நபியே!) நம் வசனங்களைப் பற்றி விவாதம் செய்து கொண்டிருப்போரை நீர் கண்டால் அவர்கள் அதைவிட்டு வேறு விஷயங்களில் கவனம் செலுத்தும் வரையில் நீர் அவர்களைப் புறக்கணித்துவிடும் (இக்கட்டளையைவிட்டு) ஷைத்தான் உம்மை மறக்கும்படி செய்துவிட்டால் நினைவு வந்ததும் அந்த அநியாயக் கூட்டத்தாருடன் நீர் அமர்ந்திருக்க வேண்டாம்.''**

(அல் குர்ஆன் 6:68)

பித்அத்துகளை பின்பற்றுவதனால் பின்பற்றுகின்றவர்களிடத்தில் ஏராளமான தீமைகள் உருவாகின்றன. அவர்கள் அல்லாஹ்வினது பண்புகளை பெயர்களை மறுக்கின்றனர்; அவற்றில் குறை காண்கின்றனர். உவமான உவமேயங்களை கூறுகின்றனர். அவனது ஆற்றல்களை மறுக்கின்றனர். இதனால் அவர்கள் இறைவனை மறுக்கக் கூடியவர்களாகவே உள்ளனர். மேலும், அவர்கள் அல்லாஹ்வை பொய்ப்படுத்தக் கூடியவர்களாகவும், அவனது சட்டங்களில் குறை காணக்கூடியவர்களாகவும், அவனையும் அவனது தூதரையும் பின்பற்றுவதில் அசிரத்தைக் காட்டக்கூடியவர்களாகவும், இன்னும்

இன்னும் புதியவைகளை தோற்றுவிக்கக் கூடியவர்களாகவும் உள்ளனர். இது அல்லாஹ்வின் மார்க்கத்தில் அதிகப்படுத்துவதாகும். எனவே, இவைகள் அனைத்தும் பித்அத்துகளின் தீமைகளாக இருப்பதனால் அவற்றை பின்பற்றுபவர்களுடன் நட்புக் கொள்வதும் அவசியத் தேவைக்காகவன்றி அவர்களுடன் ஒன்று சேர்வதும் ஹராமாகும். இவ்வாறு அவர்களைவிட்டு விலகியிருப்பது அவர்களது செயல்களை ஏற்றுக் கொள்ளாமையையும் அவர்களுடனான வெறுப்பை வெளிக்காட்டுவதாயும், அவர்களது பித்அத்துகளின் தாக்கத்தை விட்டு முஃமீன்களது உள்ளத்தை பாதுகாப்பதாகவும் உள்ளது. அத்துடன் அவர்களது வழிகேடுகளிலும் பிழைகளிலும் முஃமீன்கள் விழாது பாதுகாத்துக் கொள்ளக் கூடியதாகவும் இது அமைந்துவிடும். இவையனைத்திலிருந்தும் அல்லாஹ் எம்மைப் பாதுகாப்பானாக. ஆமீன்.

# பித்அத்து இருவகைப்படும்

## *1) அடிப்படையானது (எதார்த்தமானது)*
## *2) சேர்க்கப்பட்டது*

பித்அத்து மேற்குறிப்பிட்ட இரண்டு வகையில் எவ்வகையைச் சார்ந்ததாயினும் அது பித்அத்துதான். அவற்றைக் கொண்டு செயலாற்றுவது பிழையானதாகும். அதன் பக்கம் அழைப்பது ஹராமாகும். அதனை மறுப்பதுவும் வெறுப்பதுவும் கடமையாகும். அவையிரண்டு வகையும் மார்க்கத்தில் புதிதாக சேர்க்கப்பட்டவை; மார்க்கத்தில் அதிகரிக்கப்பட்டவை; அதன் அடிப்படைக்கு மாறுபடக்கூடியவை. எனவே, அவற்றின் ஏற்பாடு அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் எதிரான போராட்டமாகும். அல் குர்ஆனினதும் சுன்னாவினதும் வழிகாட்டலுக்கு முரண்பாடானதாகும். அவற்றை இவ்வித நோக்கமின்றி பின்பற்றினாலும் அவ்வாறே கருதப்படும். அது மிகப்பெரிய பாவமுமாகும்.

அடிப்படையான பித்அத்து என்பது மார்க்கத்தில் உள்ள எந்த ஒரு அடிப்படைச் சட்டத்துடனோ கிளைச் சட்டத்துடனோ தொடர்பில்லாத அல்லது அல் குர்ஆனிலோ, சுன்னாவிலோ, இஜ்மாவிலோ எதுவித ஆதாரமுமில்லாத புதிதாக தோற்றுவிக்கப்பட்டவைகளாகும். மேலும், அவை புதிதாக தோற்றுவிக்கப்பட்டு பின்பற்றப்பட வேண்டும் என்ற எண்ணத்துடன் மார்க்கத்தில் சேர்க்கப்படுபவையாகும். அவ்வாறு சேர்க்கப்படுவது சரியானதாக அல்லது பிழையானதாக இருப்பினும் சரியே. கப்றுகளுக்கு மேல் கட்டுவது அதிலே உயர்ந்த கோபுரங்களை எழுப்புவது, பள்ளியை எல்லைமீறி அலங்கரிப்பது, அல் குர்ஆன் மூலம் அல்லாஹ் சட்டங்களை இறக்கி அதற்காக நபி (ஸல்) அவர்களை அனுப்பியிருப்பதற்கும் அவர்களும் அவற்றை சொல்லாலும் செயலாலும் தெளிவுபடுத்தியிருப்பதற்கும் மாறாக ஷரீஅத் சட்டங்களாக மனிதன் சட்டங்களை அமைத்துக் கொள்ளல் போன்ற இவையனைத்தும் இந்த அடிப்படையிலான எதார்த்தமான பித்அத்தைச் சேர்ந்ததாகும். அவற்றிற்கு அல்குர் ஆனிலோ சுன்னாவிலோ, இஜ்மாவிலோ எதுவித அடிப்படையும் கிடையாது.

மாறாக அவ்வாறு சட்டமியற்றுவதை ஹராமாக்கியும், தடுத்தும் அதனை எச்சரித்தும் அவற்றில் ஆதாரங்கள் வந்துள்ளன. கப்றுகளின் மேல் கட்டுவதை நபி (ஸல்) அவர்கள் தடுத்தார்கள். அவ்வாறு கட்டப்பட்டவைகளை உடைக்குமாறும் பணித்தார்கள். அவ்வாறே பள்ளிகளை ஆடம்பரமான முறையில் அலங்கரிப்பதனையும் தடுத்தார்கள். அல்லாஹ் விதியாக்கிய சட்டங்களில் குறைகாண்பதனை அவன் ஹராமாக்கியுள்ளான். அல்லாஹ் தனது அடியார்களுக்கு ஷரீஅத்தாக்கியதற்கு மாற்றமாக அவனது ஷரீஅத்திலே குறைகாணக்கூடியதாக அவனது அடியார்களுக்கு யார் சட்டம் அமைத்துக் கொடுக்கிறார்களோ அவர்களை அல்லாஹ் விமர்சிக்கின்றான்; குறை கூறுகின்றான்;

அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான்.

**''அல்லது அல்லாஹ் அனுமதிக்காததை மார்க்கமாக்கி வைக்கக் கூடிய இணை(த் தெய்வங்)கள் அவர்களுக்கு இருக்கின்றனவா? மேலும் (மறுமையில் விசாரணைக்குப் பிறகு தக்க கூலி கொடுக்கப்படும் என்னும் இறைவனின்) தீர்ப்பு பற்றிய வாக்கு இல்லாதிருப்பின் (இதுவரை) அவர்களுக்கிடையில் தீர்ப்பளிக்கப்பட்டிருக்கும்''**

(அல் குர்ஆன் 42:2)

சேர்க்கப்பட்ட பித்அத்து என்பதனைப் பொறுத்தமட்டில் அது அல்குர்ஆனிலும் சுன்னாவிலும், இஜ்மாவிலும் உள்ள ஆதாரத்தை ஆதாரமாகக் கொண்டு மார்க்கத்தில் தோற்றுவிக்கும் புதிய அம்சங்களாகும். எனினும் அல்லாஹ்வோ அவனது தூதரோ சட்டமாக்காத ஒன்று மேலதிகமாக சேர்க்கப்படுகின்றது என்ற அடிப்படையில் அதுவும் பித்அத்தாகும். அனைவரும் ஒன்றாக இருந்து ஒரே ஓசையுடன் திக்ரு வைப்பதனை இதற்கு உதாரணமாகக் கொள்ளலாம். அல்லாஹ்வை நினைவு கூறுவது திக்ருவைப்பது அல்குர்ஆன் மூலம் சட்டமாக்கப்பட்டுள்ளது.

**''ஈமான் கொண்டவர்களே அல்லாஹ்வை அதிகமதிகமான திக்ரைக் கொண்டு தியானம் செய்யுங்கள் இன்னும் காலையிலும் மாலையிலும் அவனைத் துதிசெய்யுங்கள்.''**

(அல் குர்ஆன் 33,41,42)

எனவே, அல்குர்ஆன் கூறும் இக்கடமையை நிறைவேற்றுவதற்கு இன்று கொடுக்கப்படுகின்ற உருவ விளக்கம் அற்புதமானது.

அனைவரும் ஒன்று கூடி ஒரே ஓசையில் ஒன்றாக திக்ரு செய்யும் முறை புதிதாக உருவாக்கப்பட்ட ஒன்றாகும். இத்தகைய அமைப்பு தூதர் (ஸல்) அவர்களது காலத்திலோ அவர்களது தோழர்களது காலத்திலோ தாபிஈன்களது காலத்திலோ, அதற்கு பின் வந்தவர்களது காலத்திலோ நடைமுறைப்படுத்தப்பட்ட அமைப்பு முறையன்று. எனவே, கூட்டாக இருந்து திக்ரு செய்யும் இந்த அமைப்பு சேர்க்கப்பட்ட பித்அத்தைச் சார்ந்ததாகும். இதில் புதிதாக திக்ருகள் சேர்க்கப்படாத கூட்டமைப்பும் காணப்படும். எவ்வாறாயினும் அனைத்தையும் விடுவதும் அந்தமைப்பில் செயற்படாமல் இருப்பதும் அவசியமாகும். இப்பிரிவைச் சேர்ந்த பித்அத்துகள் முதற்பிரிவை விட அதிகமாகவே காணப்படுகின்றன. எதார்த்த பூர்வமான பித்அத்துகளும் குறைவு என்று சொல்வதற்கில்லை. இவற்றில் அதிகமானவைகள் செயற்படுத்தப்படுகின்ற போது செயற்படுத்துகின்றவர்களை நிராகரிப்புக்கு இட்டுச் செல்கின்றன. அல்லாஹ் பாதுகாப்பானாக.

## *நிராகரிப்புக்கு இட்டுச் செல்லும் பித்அத்துகள்.*

இத்தகைய பித்அத்துகள் பொதுவாக இறைகொள்கைகள் நம்பிக்கையுடன் தொடர்புடைய மார்க்கத்தின் அடிப்படையான விடயங்களிலேயே காணப்படும். இது அநேகமாக மார்க்கத்தைப் பற்றிய அறியாமை மனோ இச்சையை பின்பற்றல் குருட்டுத்தனமான பின்பற்றுதல்கள் போன்ற காரணங்களினாலேயே நிகழ்கின்றது. அது அல்லாஹ்வினது விதியை மறுத்தல், அதனைப் பொய்ப்படுத்தல், அல்லாஹ்வுக்குச் சொந்தமான அதிகாரபூர்வமான அடக்கியாளும் வார்த்தைகளை மொழிதல், படைப்பாளனின் பண்புகளை மறுத்துரைத்தல் போன்றவைகளாகும். அவ்வாறே அல்லாஹ்வை நிராகரித்தல் அல்லது அவர்களது நீதி நேர்மையில் குறைகாணுதல் குறிப்பாக இருபெரும் தலைவர்களை அபூபக்ர் (ரலி) உமர் (ரலி) ஆகியோரில் குறை காணுதல், அவ்வாறே அவ்லியாக்கள் இறந்த பின்பும் அவர்கள் எதற்கும் ஆற்றல் உடையவர்கள் என்ற நம்பிக்கை கொள்ளல், அதாவது கொடுக்கும், தடுக்கும், தண்டிக்கும், பிரயோசனம் கொடுக்கும் ஆற்றல்கள் இருப்பதாக நம்பிக்கை கொள்ளல், நபிமார்களை விட அவ்லியாக்கள் சிறந்தவர்கள் என்றும் அப்துல் காதிர் ஜீலானி போன்றவர்களது பெயர்களைக் கூறி உரக்கச் சப்தமிட்டு அழைத்தால் அவர்கள் விடையளிக்கின்றார்கள்; தேவைகளை நிறைவேற்றுகின்றார்கள்; கஷ்டங்களில் இருந்து விடுதலையளிக்கின்றார்கள்; அழிவிலிருந்து பாதுகாக்குகின்றார்கள்

என்பன போன்ற நம்பிக்கைகள் அனைத்தும் நிராகரிப்புக்கு இட்டுச் செல்கின்ற பித்அத்துகளாகும்.

மேலும், 'அல்குர்ஆனில் முரண்பாடுகள் உள்ளன'; 'கப்றில், வேதனைகளும் அருள்களும் உண்டு என்பது மனித அறிவிக்கு புத்திக்கு எட்டாதது' என்ற நம்பிக்கையும் இதிலடங்கும். மேற்குறிப்பிட்டவைகள் போன்றவை தவிர்ந்த நபி (ஸல்) அவர்களது காலத்துக்கும், நபித்தோழர்களது காலத்துக்கும் பின் தோற்றுவிக்கப்பட்ட அனைத்து புதிய அம்சங்களும் நிராகரிப்புக்கு இட்டுச் செல்லும் பித்அத்துகள் என்று குறிப்பிட முடியாது.

### *பாவியாக்கக் கூடிய பித்அத்துகள்*

முன் குறிப்பிட்டவைகள் நிராகரிக்கக் கூடிய பித்அத்துகளாகும். பாவியாக்கக் கூடிய பித்அத்துகள் (பாஸிக்காக்கக் கூடிய பித்அத்துகள்) பொதுவாக மார்க்கத்தின் கிளைப் பிரிவுகளிலேயே காணப்படும். சிலபோது அதனது அடிப்படையிலும் காணப்படும். முன்குறிப்பிட்டது போன்று மடமை, கண்மூடித்தனமான பின்பற்றுதல்கள், மனோ இச்சையைப் பின்பற்றுதல் போன்றவைகளே இதற்கும் காரணமாகும். இதற்குரிய சில உதாரணங்கள் வருமாறு.

1) மனோ இச்சையைப் பின்பற்றுகின்றவன் தனது ஆசைக்கும் விருப்பத்துக்கும் முரணாக வருகின்ற ஆதாரபூர்வமான ஹதீஸ்களை மறுத்துரைத்தல். இது அடிப்படையான, எதார்த்த பூர்வமான, பேராபத்தான பித்அத்தைச் சேர்ந்ததாகும். சிலர் ஈயுடன் சம்பந்தப்பட்ட ஸஹீஹுல் புகாரியில் வருகின்ற ஹதீஸை புறக்கணிக்கின்றனர்.

**''உங்களுள் யாராவது ஒருவரது (நீருள்ள) பாத்திரத்தில் ஈ விழுந்து விட்டால் அதனை முற்றாக அமிழ்த்தி விட்டு எடுத்து விடுங்கள். ஏனெனில் அதன் இரண்டு இறக்கைகளின் ஒன்றில் நோயிருக்கின்றது. மற்றையதில் அதற்குரிய நிவாரணம் உள்ளது. எனவே, நோயுள்ள அதனது இறக்கையைப் பயந்து கொள்ளுங்கள்.''**

- புஹாரி.

**'' ரஸூல் (ஸல்) அவர்கள் தூய்மையானதையே கொண்டு வந்து தூய்மையின் பக்கமே அழைக்கக் கூடியவராக இருந்தார்கள். ஆனால் இந்த ஹதீஸ் அழுக்கான தூய்மையற்றதன் பக்கம்**

**மனிதனை தூண்டக்கூடியதாக உள்ளது'' என்பதுவே மேற்குறிப் பிட்ட ஹதீஸை மறுக்கின்ற வர்கள்; முன்வைக்கின்ற வாதமாகும்.**

2) சிலர் தனது போக்கு, நிலை, கொள்கை போன்றவற்றிற்கு மாற்றமாக வருகின்ற அல் குர்ஆன் வசனங்களுக்கு அதற்குரிய உண்மை விளக்கத்தினைக் கொடுக்காது தனது போக்குக்கு ஏற்றவாறு விளக்கம் அளிக்கின்றனர்.

இதற்கு உதாரணமாக பின்வரும் வசனங்களுக்கு கொடுக்கப்ப டுகின்ற விளக்கங்களைக் குறிப்பிடலாம்.

**''ஈமான் கொண்டு நற்கருமங்கள் செய்பவர்கள் (எதிர் காலத்தில்) தங்களைப் (பாவத்திலிருந்து) காத்துக் கொண்டும் ஈமான் கொண்டும் மேலும், நற்கருமங்கள் செய்து கொண்டும் (விலக்கப்பட்டவற்றை விட்டுத்) தங்களை (பின்னரும்) பாதுகாத்துக் கொண்டும் ஈமானில் உறுதியாக இருந்து கொண்டும். மேலும், (அல்லாஹ்வுக்கு) அஞ்சியவர்களாக அழகிய நன்மைகளை செய்து வருவார்களானால் சென்ற காலத்தில் (இவ்விதி முறைகள் வருமுன்) தடுக்கப்பட்டவற்றை அவர்கள் புசித்துவிட்டது குறித்து அவர்கள் மீது குற்றம் ஏற்படாது நன்மை செய்கிறவர்களையே அல்லாஹ் நேசிக்கிறான்.''**

(அல் குர்ஆன் 5:93)

சிலர் மேற்குறிப்பிட்ட இவ்வசனத்துக்கு விளக்கம் அளிக்கும் போது மதுபானம் அருந்துவது ஆகும் என்கின்றனர்.

**''(நபியே! மேலும்) நீர் கூறுவீராக: அல்லாஹ்தான் (அதை இறக்கிவைத்தான்) பின்பு அவர்களைத் தம் வீணான (தர்க்கத்)தில் விளையாடிக் கொண்டிருக்குமாறு விட்டு விடுவீராக.''**

(அல் குர்ஆன் 6:91)

ஸூஃபித்துவத்தின் உச்சக் கட்டத்திற்குச் சென்ற சில ஸூஃபியாக்கள் மேற்குறிப்பிட்ட இவ்வசனத்திற்கு விளக்கமளிக்கும் போது தனியான வார்த்தைகளைக் கொண்டு அல்லாஹ்வை நினைவு கூற முடியும், திக்ரு செய்ய முடியும் என தவறான விளக்கத்தினை கொடுக்கின்றனர். ஆனால் இத்தகைய விளக்கம் அல் குர்ஆனிற்கு நபித்தோழர்கள் அளித்த விளக்கத்திலோ, தாபிஈன்கள் அளித்த விளக்கத்திலோ, அவர்களைத் தொடர்ந்து வந்த அல் குர்ஆன்

விளக்கவுரையாளர்களிடத்திலோ காண முடியாது. மட்டுமன்றி எவர் மீது இக்குர்ஆன் இறக்கியருளப்பட்டதோ அவருடைய எந்தவொரு அறிவிப்பையும் அதற்கு ஆதாரமாகக் காணமுடியாது

**''அல்லது உங்களின் தோழரின் வீடுகளிலோ நீங்கள் சேர்ந்தோ தனித்தனியாகவோ புசிப்பது உங்கள் மீது குற்றமாகாது''**

(அல் குர்ஆன் 24:61)

என்ற இந்த வசனத்திற்கு சிலர் விளக்கம் அளிக்கும் போது சிலருக்கு இடையில் நட்பு உறுதியாகி அவர்களுக்கு மத்தியில் சகோதரத்துவமும் உறுதியாகிவிட்டால் அவர்களுக்கு மத்தியில் தங்களது (பெண்களின்) பர்தாவின் சட்டம் விழுந்து விடுகின்றது என்று கூறுகின்றனர். மேலும், சிலர் சிலரது மனைவிமார்களை அவர்களுக்கு மத்தியில் திரையின்றிப் பார்க்கின்றார்கள். ஆண்களும் பெண்களும் இரண்டாகக் கலந்து ஒன்றாக இருந்து சாப்பிடு கின்றார்கள். இதற்கு மேற்குறிப்பிட்ட வசனத்திற்கு கொடுக்கப்ப டுகின்ற விளக்கத்திலிருந்தே ஆதாரம் எடுக்கின்றனர். ஆனால் இது முற்றிலும் தவறான விளக்கமாகும். இதற்கு மாற்றமாக அல் குர்ஆனும் சுன்னாவும் இஜ்மாவும் கூறுகின்றன.

மேற்குறிப்பிட்ட இவைகள் நிராகரிக்கக்கூடிய பாஸிகாக்கக் கூடிய பித்அத்துக்குரிய சில உருவமைப்புகளும் உதாரணங்களுமாகும். இவையிரண்டுமல்லாத பித்அத்துகளும் உள்ளன. அவை சேர்க்கப்பட்டதும் இணைக்கப்பட்டதுமான பித்அத்தை சேர்ந்த வையாகும். எதார்த்தமானவையன்று. மேலும், அவை மார்க்கத்தின் அடிப்படையானவற்றுடனன்றி கிளைச்சட்டங்களுடன் தொடர்புற்ற வையாகும். மேலும் அவை ஹலாலை ஹராமாக்கக்கூடியவையுமன்று. ஹராத்தை ஹலாலாக்கக்கூடியவையுமன்று, அவற்றிற்கு உதாரணமக பள்ளியில் ஐந்து நேரத்தொழுகைகளுக்குப் பின் கூட்டாக ஓதப்படும் துஆ, திக்ரு, சுபஹ் தொழுகைக்கு அதான் சொல்லப்படும் போது 'அஸ்ஸலாது வஸ்ஸலாமு அலைக்க யாரஸூலுல்லாஹ்' என்று கூறுவது, அவ்வாறே அதனைக் கூட்டுவது, ஜும்ஆத் தொழுகைக்குறிய அதானில் அதனை மேலும் அதிகப்படுத்துதல், கூட்டாக இருந்து ஒரே ஓசையில் அல்குர் ஆனை ஓதுவது போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

அவ்வாறே ஒன்றாக இருந்து நபி(ஸல்) அவர்களைப் புகழ்ந்து பாடுதல், அவற்றில் இணைவைக்கக்கூடிய வார்த்தைகள் இல்லாதிருப்பினும் சரியே, மேலும் கூட்டுத்தொழுகையில் ஸலாம்

கொடுத்து முடிந்ததும் வலதும், இடதுமாக முஸாபஹா செய்தல் போன்றவற்றையும் குறிப்பிடலாம். இவை தவிர்ந்த இன்னும் இணைக்கப்பட்டதும் சேர்க்கப்பட்டதுமான பித்அத்துகள் ஏராளமாக உள்ளன. அவற்றில் சிலவற்றை எச்சரிக்கைக்காக பின்பு குறிப்பிடுவோம். இன்ஷா அல்லாஹ்.

இந்த இறை நிராகரிப்புக்கு இட்டுச் செல்லாத பாவியாக்காத பித்அத்துகளைப் பற்றி படிப்பவர்கள் அல்லது கேட்பவர்கள் அவற்றைச் செயற்படுத்துவது கூடுமென்றோ அதனைச் செய்பவனுக்கு கூலிகொடுக்கப்படும் என்றோ தவறாக விளங்கிக் கொள்ளக் கூடாது. அவை நல்லநோக்கத்துடன் தூயஎண்ணத்துடன் சேர்க்கப்பட்டிருப்பினும் அது கூடவே கூடாது. பித்அத்துகள் எதார்த்தமானதாக, இணைக்கப்பட்டதாக உள்ள பித்அத்துகள் நிராகரிக்கப்படக் கூடியதாகவோ, பாவியாக்கக்கூடியதாகவோ, இவையிரண்டுமல்லாதவையாகவோ, எத்தகையதாகவோ இருப்பினும் இவையனைத்தும் பித்அத்துகள் என்ற வகையில் வழிகேடுகளே. மேலும், இவை சட்டம் இயற்றியவன் மீது பழிசுமத்துவதுமாகும். இதனால் தான் இவை (பித்அத்துகள்) ஹராமாக்கப்பட்டு தடுக்கப்பட்டுள்ளன. எனவே, அவற்றைக் கொண்டு செயற்படுவதோ, அவற்றை அங்கீகரிப்பதுவோ, அவற்றைப்பற்றி எதுவும் பேசாது அமைதியாக இருப்பதுவோ கூடாது.

பித்அத் எவ்வகையாயிருப்பினும் அது பொதுவாக வழிகேடாகும். ஏனெனில் அவற்றைக் கொண்டு செயற்படும் போது சுன்னாவின் செயற்பாடுகள் புறக்கணிக்கப்படுகின்றன. இந்த வகையில்தான் அனைத்து வகையான பித்அத்துகளுக்கும் வழிகேடுகள் என நபி (ஸல்) அவர்கள் குறிப்பிட்டார்கள்.

**''உங்களுக்கு நூதனமானவற்றை எச்சரிக்கின்றேன், ஏனெனில் அனைத்து நூதனங்களும் பித்அத்தாகும். அனைத்து பித்அத்துகளும் வழிகேடாகும்.''**

-ஹதீஸ்.

வழிகேடுகள் நெருக்கமானது தூரமானது என வேறுபடுகின்ற போது பித்அத்துகளும் சில பெரியவையாகவும் வேறுசில சிறியவையாகவும் இன்னும் சில நிராகரிப்புக்கு இட்டுப் செல்லக் கூடியதாகவும், மற்றும் சில பாவியாக்கக் கூடியதாகவும் இருக்கின்றன.

அதேவேளை இன்னும் சில நிராகரிப்புக்கோ பாவியாக்கக் கூடிய நிலைக்கோ இட்டுச் செல்லாதவைகளாகவும் காணப்படுகின்றன.

இவை சிறிய பித்அத்துகள். இஸ்லாமிய அறிஞர்கள் இந்த சிறிய பித்அத்துகளுக்கு சில வரையறைகளை, நிபந்தனைகளை இட்டுள்ளனர். கீழ்க்காணும் அந்த வரையறைகளுக்கு உட்பட்டுவரும் பித்அத்துகள் அனைத்தும் நிராகரிப்புக்கோ பாவியாக்கக் கூடிய நிலைக்கோ இட்டுச் செல்லாத சிறிய பித்அத்துகளாகும்.

1. அதனை தொடர்ந்து செய்யாமல் இருக்க வேண்டும்.

2. ஏனையவர்களை அதன் பக்கம் அழைக்காதிருக்க வேண்டும்.

3. மக்கள் ஒன்று கூடுமிடங்களில் அவற்றைச் செய்யாதிருக்க வேண்டும்.

4. அதனையும், அதனைச் செய்பவனையும் எவரும் இழிவுடன் நோக்காதிருக்க வேண்டும்.

எனவே, ஏதாவது ஒரு செயல் இவ்விதிகளுக்குட்பட்டுக் காணப்பட்டால் அது சிறிய பித்அத்தாகும்.

# பித்அத்துகளுக்கு எதிரான போராட்டம் ஒரு கடமையே

பித்அத்துகள் எவ்வளவுதான் சிறியதாயினும் அவற்றை மறுப்பது அவற்றையிட்டு எச்சரிக்கையாக இருப்பது ஒவ்வொரு முஸ்லிமினதும் கடமையாகும். அவற்றை நடைமுறைப்படுத்தாது தவிர்ந்து கொள்வதுவும் கடமையாகும். நபிகளார் (ஸல்) அவர்கள் பித்அத்தை எதிர்க்கின்றபோது, அது பற்றி எச்சரிக்கின்ற போது பித்அத்துகளை பிரித்து வகைப்படுத்திக் கூறவில்லை. மாறாக அது வழிகேடு என்று அனைத்து பித்அத்துகளையும் பொதுவாகவே சுட்டிக் காட்டினார்கள். எனவே, பொதுவாக பித்அத்துக்களைக் கொண்டு செயற்படுவது ஹராமாகும். அனைத்தையும் மறுப்பது கடமையாகும். எத்தனை அற்பமான சிறிய செயலாயினும் அதனைக் கொண்டு செயற்படக் கூடாது. சில ஹதீஸ்களில்

**''அனைத்து வழிகேடுகளும் நரகிற்கே இட்டுச் செல்லும்''**

என்ற வார்த்தைகள் வந்திருக்கும் போது அவற்றைச் செய்வது கூடுமென்றோ மறுக்கக் கூடாது என்றோ எப்படிக் கூறமுடியும். பித்அத்தான செய்ல்களைச் செய்கின்றவனை நரகிலே கொண்டு போய்ச் சேர்க்கும் என்பதுவே அந்த வார்த்தைகளின் கருத்தாகும். எனவே இந்த வகையில் பித்அத்தைப் புறக்கணிப்பதுவும் விமர்சிப்பதுவும் அதனுடனான போராட்டத்துக்கு உதவுவதும் ஒவ்வொரு முஸ்லிமினதும் நீங்காக் கடமையாகும். கீழ்க்காணும் ஹதீஸ்களும் இஸ்லாமிய அறிஞர்களது கருத்துக்களும் இவ்வுண்மையை மேலும் தெளிவு படுத்தி உறுதிப்படுத்துகின்றன.

1. **''ஒரு மனிதன் வெயிலில் நின்று கொண்டிருப்பதைக் கண்ட ரஸூல் (ஸல்) அவர்கள், ''இது என்ன?'' என்று கேட்டார்கள். ''அபூ இஸ்ராஈல் நிழல் பெறாது வெயிலில் நிற்பதாகவும், எவருடனும் பேசாமல் இருப்பதாகவும், நோன்பு நோற்பதாகவும் நேர்ச்சை செய்துள்ளதாக அவர் பதில் கூறினார்'' (அவனது அந்த நேர்ச்சையை விட்டு விட்டு ) அவனுக்கு உட்கார்ந்திருக்குமாறும், நிழல் பெறுமாறும், மற்றவர்களுடன் பேசுமாறும் நோன்பை முடித்துக் கொள்ளுமாறும் நீங்கள் அவனுக்குக் கூறுங்கள்''**

- புஹாரி.

என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

மேற்குறிப்பிட்ட இந்த ஹதீஸ் பிஅத்துக்கெதிரான போராட்டத்தி னையும் அதனை மறுப்பதற்குரிய தோற்றத்தினையும் எடுத்துக் காட்டுகின்றது.

2. ஒரு தடவை நபி(ஸல்) அவர்களது வீட்டுக்கு வந்த மூன்று மனிதர்கள் அவரது வணக்க முறைகளைப்பற்றி அவரது மனைவிமார்களிடத்தில் கேட்டனர். நபியவர்களது வணக்க முறைகள் எடுத்துக் கூறப்பட்டன. அவை அவர்களுக்குத்தான் கூறப்பட்டனவே என்ற உணர்வு அவர்ளில் பிறந்தது. எனவே, முன்பின் பாவங்கள் மன்னிக்கப்பட்ட நபி (ஸல்) அவர்களது வணக்கம் இவ்வளவு என்றால் நாம் எவ்வளவு அதிகம் செய்ய வேண்டும் என்று (அவர்களுக்குள்) கூறிக் கொண்டனர்.

அவர்களில் ஒருவர் நான் எப்போதும் இரவெல்லாம் தொழுவேன் என்றும் மற்றவர் நான் காலமெல்லாம் விடாது நோன்பு நோற்பேன் என்றும், மூன்றாமவர் நான் என்றும் பெண்களைவிட்டு ஒதுங்கியிருப்பேன் என்றும் கூறினார் (இந்த விடயம் ரஸூல் (ஸல்) அவர்களுக்கு அறிவிக்கப்படுகின்றது) பின் நபியவர்கள் ''நீங்கள் தாம் இப்படியெல்லாம் கூறினீர்களா?'' என்று கேட்டுவிட்டு ''நான் உங்களைவிட அல்லாஹ்வை அஞ்சுகிறேன். அவனுக்குப் பயப்படுகிறேன். என்றாலும் நான் நோன்பு நோற்கின்றேன், விடுகின்றேன், தொழுகின்றேன், உறங்குகின்றேன், பெண்களைத் திருமணம் முடிக்கின்றேன். எனவே, யார் எனது சுன்னாவைப் புறக்கணிக்கிறார்களோ அவர்கள் என்னைச் சேர்ந்தவனல்ல. என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

- புஹாரி.

3. இறந்த ஒரு சுன்னாவை ஒருவர் உயிர்ப்பிக்க வில்லை யெனில் உயிர்பிக்கப்பட்ட ஒரு பித்அத்தை அழிக்கவில்லை யெனில் அவர் தனது வாழ்க்கையில் வேறு எதனையும் காணவில்லை, செய்யவில்லை என்று கூறுமளவுக்கு பித்அத்து களுக்கு முன் உமர் இப்னு அப்துல் அஸீஸ் அவர்களது நிலைப் பாடு கடுமையாகக் காணப்பட்டது. மேலும் அவர் தனது உப தேசங்களிலே இவ்வாறு கூறியுள்ளார்கள்.

**''மனிதர்களே அல்லாஹ்வின் மீது ஆணையாக நிச்சயமாக நான் இறந்த ஒரு சுன்னாவை உயிர்ப்பிக்கவில்லையெனின் ஒரு கனநேரமும் நான் உங்களுக்கு முன் உயிர்வாழ்வதை வெறுக்கின்றேன்''**

என்று கூறினார்கள்.

4. **சுன்னாவைப் பாதுகாப்பது ஜிஹாதைவிட சிறந்ததாகும்.**✱

என யஹ்யா பின் அபி யஹ்யா என்பவர் குறிப்பிட்டுள்ளார்கள். இவரது இக்கூற்றை அவதானிக்கும் ஒருவர் பித்அத்துகளை நீக்கி அதற்கு எதிராக போராடுவதுதான் போராட்டங்களில் சிறந்தது என்று கூறியதன் மூலம் அவர் எவ்வாறு சுன்னாவுக்கு அரண் அமைத்துள்ளார் என்பதனை விளங்க முடிகின்றது.

எனவே, மேற்குறிப்பிட்ட ஹதீஸ்களும், அறிஞர்களது கூற்றுக்களும் பித்அத்துக்கு எதிரான போராட்டம் என்றும் அவ்விடயத்தில் சோம்பல் காட்ட முடியாது; அதனை பொடுபோக்காக விட்டு விட முடியாது என்பதனையும் அது மார்க்கக் கடமைகளில் ஒன்று என்பதனையும் உறுதிப்படுத்துகின்றன.

---

✱ இவ்வாறு குறிப்பிட்டது சுன்னாவின் முக்கியத்துவத்தை உணர்த்தி பித்ஆவை தவிர்ப்பதற்கேயாகும். மாறாக, ஜிஹாதை தரம் குறைந்தோ மறுத்தோ கூறுவதற்கல்ல.

## பித்அத்துகளின் தோற்றத்திற்கான காரணங்கள்:

பித்அத்துகள் தோற்றம் பெற்றுள்ளமைக்கு பல்வேறு அம்சங்கள் காரணமாயிருந்துள்ளன. அக்காரணங்களை அறிந்து கொள்வது அவற்றிக்கு எதிரான போராட்டத்திற்கும் அவற்றிலிருந்து விலகிக் கொள்வதற்கும் துணை செய்கின்றது. அல்லது குறைந்த பட்சம் அவற்றை கட்டுப்படுத்திக் கொள்வதற்கும் முஸ்லிம்களுக்கு மத்தியில் அவை பரவுவதை தடுப்பதற்கும் துணை செய்கின்றது. எனவே, பித்அத் தோற்றம் பெற்றதற்குரிய காரணங்கள் வருமாறு.

***1. நபி (ஸல்) அவர்களது வழிமுறைகள் பற்றிய அறிவின்மை:***

அவர்களது வழிமுறைகள் பற்றிய அறிவு தெளிவு இல்லாதவிடத்து அவன் வழிதவறிவிடுகின்றான். இதனால் வணக்கம் என்ற பெயரில் ரஸூல் (ஸல்) அவர்கள் காட்டித்தந்த வழிமுறைக்கு மாற்றமான பல அம்சங்களை அவன் தோற்றுவிக்க தலைப்பட்டு விடுகின்றான். அதனை அவனும் மற்றோரும் பின்பற்றவும் முற்பட்டு விடுகின்றனர்.

**2. சுன்னாவின் செயற்பாட்டை விட்டுவிடுதல்:**

எவன் சுன்னாவின் செயற்பாட்டை விட்டுவிடுகின்றானோ அவன் பித்ஆவை செயற்படுத்துகின்றான்

அல் குர்ஆன் பின்வருமாறு கூறுகின்றது.

**''எவனொருவன் அர்ரஹ்மானின் நல்லுபதேசத்தைவிட்டும் கண்ணை மூடிக் கொள்வானோ அவனுக்கு நாம் ஒரு ஷைத்தானை ஏற்படுத்திவிடுகின்றோம். அவன் இவனது நெருங்கிய நண்பனாகிவிடுகின்றான். இன்னும் அந்த ஷைத்தான்கள் அவர்களை நேரான பாதையிலிருந்து தடுத்து விடுகின்றான். ஆனாலும் தாங்கள் நேரான பாதையில் செலுத்தப்படுவதாகவே அவர்கள் எண்ணிக் கொள்கிறார்கள்.''**

(அல் குர்ஆன் 43:36,37)

***3. அல்லாஹ்வுக்கு வழிப்பட வேண்டும் நல்லவைகளைச் செய்ய வேண்டும் என்பதில் உள்ள ஆசை, ஆர்வம்.***

இணைக்கப்பட்ட சேர்க்கப்பட்ட பிரிவில் அடங்குகின்ற பெரும்பாலான பித்அத்துகள் வழிப்பட வேண்டும் என்ற

ஆர்வத்தினாலும் ஆசை மேலீட்டினாலும் உருவானவைகளே. நல்லமல்களில் ஆசை ஆர்வம் ஏற்பட்ட ஒருவனுக்கு மார்க்கத்தில் தெளிவு இல்லையெனில் அந்த ஆசை இஸ்லாத்தில் மேலதிக வணக்க வழிமுறைகளையும் நூதனங்களையும் தோற்றுவிக்கத் தூண்டுகின்றது.

***4. அல்லாஹ்வின் மீது கொண்டுள்ள பயம்.***

அல்லாஹ்வை அளவு மீறிப்பயப்படுகின்ற போது அவனுக்கு வழிப்படுதல் என்ற வகையில் நல்லதை செய்வதிலும் வெறுக்கக் கூடியதை விடுவதிலும் எல்லைமீறிவிடுகின்றான். எனவே, பேணுதல் இறையச்சம் என்ற வகையில் சில அம்சங்களை விடுவதன் மூலமும் இன்னும் சிலவற்றை செய்வதன் மூலமும் அவனில் பித்அத்தான செயற்பாடுகள் தோற்றம் பெறுகின்றன. ஏற்கனவே, குறிப்பிடப்பட்ட அபூ இஸ்ராயீலுடைய சம்பவமும் நபி (ஸல்) அவர்களது வணக்கமுறைகளைப் பற்றி கேட்டபின் சில வணக்க முறைகளில் உறுதி கொண்ட மூன்று மனிதர்களது சம்பவமும் இதற்குரிய உதாரணமாகும்.

***5. இஸ்லாத்துக்கும் முஸ்லிம்களுக்கும் எதிரான சூழ்ச்சி:***

ரஸூல் (ஸல்) அவர்களது குடும்பத்தை நாம் ஆதரிக்கின்றோம் என்ற வகையில் தோற்றம் பெற்ற ஷீஆக்களின் வணக்க முறைகளும் பெரும்பாலான ஸூஃபித்துவ வழிமுறைகளும் இதற்குரிய சிறந்த உதாரணங்களாகும். இவர்களது வணக்க முறைகளில் அதிகமானவை பித்அத்தானவையே அத்துடன் அவை இஸ்லாத்தையும் முஸ்லிம்களையும் அழிக்கும் நோக்குடனேயே தோற்றுவிக்கப்பட்டும் உள்ளன.

***6. அதிகார வர்க்கத்தினரிடையே ஆதரவு தேடல்:***

ஆட்சியாளர்கள் அதிகாரிகள் போன்றோரிடத்தில் ஆதரவைப் பெற்றுக் கொள்ளும் நோக்கில் எவ்வளவோ பித்அத்துகள் தோற்றுவிக்கப்பட்டுள்ளன. இதற்கேற்ற வகையில் அல் குர்ஆன் வசனங்கள் விளக்கமளிக்கப்பட்டுள்ளன; ஹதீஸ்கள் புனைந்துரைக்கப்பட்டுள்ளன. ஆட்சியாளர்களது விருப்பத்தையும் திருப்தியையும் பெறுவதற்காக மிக மோசமான பித்அத்துகள் உருவாக்கப்பட்டுள்ளன. இது ஹலாலானவற்றை ஹராமாக்கி, ஹராமானவற்றை ஹலாலாக்கும் அளவுக்கு அவர்களை இட்டுச் சென்றுள்ளது. இஸ்லாமிய வரலாற்றில் ஆட்சியாளர்களின் ஆதரவைப் பெறும் நோக்கில் உருவான ஒரு பிரிவினர் ''அல் குர்ஆன் படைக்கப்பட்டது'' என்ற கருத்தை முன்வைத்தனர். இதைவிடப்

பயங்கரமான, மோசமான வேறு உதாரணம் இதற்குக் கிடையாது. அல்லாஹ் எம்மைப் பாதுகாப்பானாக.

***7. பதவி உயர்வையும் அதற்கான பாதுகாப்பையும் வேண்டுதல்:***

இஸ்லாமிய அறிவு இல்லாதவர்கள், தகுதியில்லாதவர்கள் ஒரு தரீக்காவுக்கு அல்லது ஓர் அமைப்புக்கு அல்லது ஒரு கூட்டத்திற்கு அதனை வழிநடத்தும் தலைவராகவோ பொறுப்பாளியாகவோ நியமிக்கப்பட்டால் அவர்களிடத்தில் இத்தகைய போக்கைக் காணலாம். எனவே, இவ்வாறு நியமிக்கப்பட்டவர்கள் அப்பதவியில் தான் நிலைத்திருக்க வேண்டும் என்பதற்காக மக்களின் ஆதரவைப் பெறும் நோக்கில் இஸ்லாம் சொல்லாத வணக்க வழிமுறைகளையும் ஏனைய அம்சங்களையும் தோற்றுவிக்கின்றனர். துஆக்களையும் திக்ருகளையும் அவ்ராதுகளையும் தோற்றுவிக்கின்றனர். அதனை தமது வழிகாட்டலில் இருக்கின்ற தரீக்காச் சகோதரர்களுக்கும் முரீதின்களுக்கும் அறிமுகப்படுத்துகின்றனர். இவ்வகையில் தோற்றுவிக்கப்பட்ட பித்அத்துகளை கணக்கிலடக்கிவிட முடியாத அளவு மலிந்து காணப்படுகின்றன. இத்தகைய பித்அத்துகள் வணக்கவழிபாடுகளை மட்டுமன்றி அகீதாவையும் பாதிக்கும் வகையில் உள்ளன.

***8. பித்அத்தையும் மஸாலிஹுல் முர்ஸலையும் பிரித்தறிய முடியாத குழப்பநிலை:***

பித்அத்துகள் நிலைபெறுவதற்கும், அவை பரவுவதற்கும், செயற்படுத்தப்படுவதற்கும் மஸாலிஹுல் முர்ஸலையும் பித்அத்துகளையும் பிரித்தறிய முடியாத குழப்பநிலையே மிக முக்கிய காரணியாகும். மேலும் சில பித்ஆ ஐந்து கட்டங்களை பிரிவுகளைக் கொண்டுள்ளது என்கின்றனர்.

**அவை:** வாஜிபானது, சுன்னத்தானது, ஆகுமானது, வெறுக்கத்தக்கது, ஹறாமானது என்பனவாகும். இதனால்தான் மஸாலிஹுல் முர்ஸலையும் பித்ஆவையும் பிரித்தறிவது கடமையாகும். அவற்றை முஸ்லிம்களுக்கு தெளிவுபடுத்துவதும், சந்தேகம் நீங்கும் வரைக்கும் உண்மையையும், சத்தியத்தையும் தெளிவுபடுத்துவதும் இன்றியமையாத ஒன்றாகும். சமூகத்தில் இஸ்லாத்தின் பெயரால் பித்அத்துகளைத் தோற்றுவிப்பதுவும் பின்பற்றுவதுவும் அனுமதிக்கப்படுகின்றபோது மஸாலிஹுல் முர்ஸலா புறக்கணிக்கப்படுகின்றது.

### *மஸாலிஹுல் முர்ஸல்*

மஸாலிஹுல் முர்ஸல் என்பது மார்க்கத்தில் புதிதாக தோற்றுவிக்கப்பட்ட ஒன்றல்ல. மேலதிகமாக சேர்க்கப்பட்ட ஒரு சட்டமும் அல்ல. மாற்றமாக இது இஸ்லாமிய சட்ட மேதைகளினால் விளக்கமளிக்கப்பட்ட ஷரீஆவின் அடிப்படை விதி முறைகளின் பிரதிவிளைவாகும். இஸ்லாமிய சட்ட மேதைகள் கீழ்வருமாறு (சட்டவிதி முறையொன்றைக் கூறியுள்ளனர்).

**''ஒரு கடமை நிறைவேறுவதற்கு எது தேவையோ அதனை நிறைவேற்றுவது அல்லது பெற்றுக் கொள்வதும் கடமையே.''**

உதாரணமாக அனைத்துத் தொழுகைக்கும் (கஃபாவை) தவாப் செய்வதற்கும் சுத்தம் அவசியம், சுத்தம் சுத்தமான நீரினாலேயே நிறைவேற்றப்படுகின்றது. நீர் என்பதற்காக அதனைத் தேடுவதோ அதற்கான முயற்சிகளைச் செய்வதோ அவசியமன்று; கடமையுமன்று. ஆனால், கடமையான சுத்தம் அந்த நீரில் தங்கியிருப்பதனால் அதனைத் தேடுவதும் பெற்றுக் கொள்வதும் கடமையாகும். அவ்வாறே ஜிஹாதை இதற்குரிய மற்றொரு உதாரணமாகக் குறிப்பிடலாம். ஜிஹாத் செய்வது ஒரு கடமை. அதனை ஆயுதமின்றிச் செய்ய முடியாது. எவ்வித நோக்கமுமின்றி ஆயுதங்களைச் செய்வதுவோ வாங்குவதோ கடமையன்று. ஆனால் ஜிஹாத் என்கின்ற போது; தற்பாதுகாப்பு என்கின்ற போது அவற்றைச் செய்வதுவும் வாங்குவதும் கடமையே. ஏனெனில் ஆயுதமின்றி ஜிஹாத் செய்ய முடியாது. மேற்குறிப்பிட்டது போன்று இன்னுமோர் உதாரணத்தையும் மஸாலிஹுல் முர்ஸனுக்கு குறிப்பிடலாம். மார்க்கத்தை நிலை நாட்டுவது கடமையாகும். இதுபற்றி அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான்.

**''நீங்கள் (அனைவரும்) சன்மார்க்கத்தை நிலைநிறுத்துங்கள் நீங்கள் அதில் பிரிந்து விடாதீர்கள்.''**

(அல் குர்ஆன் 42:13)

மார்க்க விடயங்கள் அடிபணிவதற்கு கடமையான ஒரு இமாமைக் கொண்டுதான் நிலைநாட்டப்பட வேண்டும். எனவே, மார்க்கத்தை நிலைநாட்டுவதற்கு இமாமை நிலைநாட்டுவது கடமையாகும். நியமிக்கப்பட்ட இமாமுக்கு வழிப்படுவதும் கடமையாகும். வெறுமனே ஒரு இமாம் இருக்க வேண்டும் என்பது கடமையன்று மாறாக, இஸ்லாமிய கடமைகள் சட்டங்கள் நிலைநாட்டப்பட

வேண்டும் என்ற கடமை இமாமை நியமிப்பதில்தான் தங்கியுள்ளது. ஆகவே, இமாம் நியமிக்கப்படுவது ஒரு கடமையாகின்றது.

இத்தகைய விதிமுறையின் பிரதிபலன் தான் மஸாலிஹுல் முர்ஸலின் தோற்றமாகும். மேலும் உடல், அறிவு (புத்தி) மார்க்கம், கண்ணியம், செல்வம் ஆகிய இன்றியமையாத ஐந்து அம்சங்களைப் பாதுகாப்பதற்காக வழிமுறைகளும் இதன் மூலமே பெறப்பட்டுள்ளன. அவ்வாறே உடலுக்கு ஏற்படுகின்ற கஷ்டங்கள் சிரமங்கள் நீக்கப்படுவதற்குரிய ஒரு வழிமுறையாகவும் இது பெற்றுக் கொள்ளப்படுகின்றது. சிலர் சில செயற்பாடுகளை பித்அத்துகளை - அழகிய பித்அத்துகள் எனப் பெயரிட்டுள்ளனர். எனவே, அதற்கும் மஸாலிஹுல் முர்ஸலாவுக்குமிடையில் உள்ள வேறுபாட்டினை விளங்குவதற்கும் மஸாலிஹுல் முர்ஸலாவை தெளிவுபடுத்துவது அவசியமாகும். எனவே, ஏதாவது பொருத்தமான கருத்தையுடைய பொருளையுடைய ஒரு விடயத்தில் ஒரு சட்டம் இருப்பதற்கு அதனுடன் மற்றொரு சட்டம் இணைந்ததாக இருக்க வேண்டும். குறிப்பிட்ட விடயத்துக்குரிய சட்டம் இயற்றப்படுவதற்கு, அதற்கும் ஏற்கனவே சட்டம் தெளிவுபடுத்தப்பட்டுள்ள அம்சத்துக்குமிடையில் உள்ள பொருத்தப்பாட்டை நபி (ஸல்) அவர்கள் ஏற்றுக் கொண்டதற்கான சான்று இருக்க வேண்டும். அது உயிர்களையும் ஏனைய அம்சங்களையும் பாதுகாப்பதற்காக பழிவாங்குவது ஷரீஅத்தாக்கப்பட்டுள்ளதைப் போலாகும். அது சரியானது என்பதிலும் அதனை ஏற்றுக் கொள்வதிலும் எதுவித மயக்கமும் குழப்பமும் கிடையாது.

ரஸூல் (ஸல்) அவர்கள் ஏற்றுக் கொள்ளாமைக்கும் மறுத்தமைக்குமுள்ள சான்றுகளைப் பொறுத்தவரையில் விபச்சாரம் மூலம் பெறும் பணத்தையும், சாஸ்திரக்காரர்களை அங்கீகரிப்பதனையும் குறிப்பிடலாம். விபச்சாரம் மூலம் கிடைக்கும் பணத்தை ஆகும் என்பது 'விபச்சாரம் ஆகும்' என்ற சட்டத்தை கொடுப்பதற்குச் சமமாகும். குறிகேட்பது, குறிபார்ப்பது ஒரு சடரீதியான நன்மையாகும். அதனை ரஸூல் (ஸல்) அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை; மறுத்தார்கள். எனவே சாஸ்திரத்தையும், விபச்சாரத்தையும் தடுப்பதிலும் மறுப்பதிலும் எதுவித குழப்பமும் மயக்கமும் கிடையாது. ஏதாவது ஒரு விடயத்தில் அதனை ஷரீஅத் ஏற்றுக் கொண்டதற்கோ, மறுத்தற்கோ எதுவித ஆதாரமும் இல்லையெனின் அதுவே மஸாலிஹுல் முர்ஸலுக்குரிய களமாகும்.

'மஸாலிஹ்' என்பது 'மஸ்லஹ்' என்ற சொல்லின் பன்மையாகும். அதாவது இவ்வுலகிலும் மறுமையிலும் மனிதனுக்கு நன்மைபயக்க வேண்டும்; பிரயோசனம் கிடைக்க வேண்டும் என்பதனைக் கருத்திற் கொண்டு 'இபாதா' விடயங்களை சீர்படுத்தல் என்பதுவே இதனது பொருளாகும். 'முர்ஸலா' என்பது நபி (ஸல்) அவர்கள் ஒன்றை ஏற்றுக் கொண்டதாகவோ மறுத்ததாகவோ ஷரீஆ வரையறுத்துக் காட்டாத பொதுவானவைகளாகும். அதாவது அவற்றை ஷரீஆ ஏற்றுக் கொள்ளவுமில்லை, மறுக்கவுமில்லை.

இத்தகைய மஸாலிஹ் முர்ஸாலாவுக்கு அல்குர்ஆனிலோ, சுன்னாவிலோ எதுவித ஆதாரமும் கிடையாது. என்றாலும் நபி (ஸல்) அவர்களது நடைமுறைகளுக்கு வழிமுறைக்கு முரணில்லாத வகையில் அது அமையவேண்டும் என்பது நிபந்தனையாகும். அந்த மஸாலிஹுல் முர்ஸலா நபி (ஸல்) அவர்கள் பொதுவாக ஏற்றுக் கொண்ட ஒரு பிரிவினைச் சார்ந்ததாக அதற்குப் பொருத்தமானதாக இருக்க வேண்டும். இத்தகைய மஸாலிஹுல் முர்ஸலாவிற்கு கீழ்க்காணும் உதாரணங்களைக் குறிப்பிடலாம்.

1. மக்கள் தமது பொருட்களை சில போது அமனிதமாக பாதுகாப்பதற்காக வேற சிலரிடம் ஒப்படைக்கின்றனர். குறிப்பிட்ட அப்பொருட்கள் ஒப்படைக்கப்பட்டவரிடம் இருக்கும் வேளையில் சேதமடைந்து விடுகின்றது அல்லது தொலைந்துவிடுகின்றது. இதற்கு யார் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டவரே அதற்குப் பொறுப்பாளி. ஆனால் இதுபற்றி நபி (ஸல்) அவர்கள் எதுவும் கூறவில்லை. அதனை மறுத்ததற்கோ அங்கீகரித்தமைக்கோ ஷரீஆவின் மூலாதாரமாகிய அல் குல்ஆனிலோ, சுன்னாவிலோ எதுவித ஆதாரத்தையும் காணமுடியாது. இருந்த போதிலும் பொருட்களை பாதுகாப்பதற்காக ஏற்றுக் கொண்டவர்களே அழிந்து போன காணமற்போன பொருளுக்கு பொறுப்பாளிகள் என நேர்வழி பெற்ற நான்கு கலீபாக்களும் தீர்ப்பு வழங்கியுள்ளனர். இத்தகைய பொறுப்பு இன்றேல் மக்கள் நன்மையடையமாட்டார்கள் என அலி (ரலி) அவர்கள் குறிப்பிட்டார்கள். அதிலிருந்து எத்தகைய நன்மைகளை மக்கள் பெற்றுக் கொள்கின்றார்கள் என்பதனை இமாம் ஷாபீஈ (ரஹ்) அவர்கள் தெளிவாக விளக்கிக் காட்டுகின்றார்கள். மக்கள் தமது பொருட்களை அத்தகைய பாதுகாப்பாளர்க

ளிடம் பாதுகாப்புக்காக வைக்க வேண்டிய தேவையு டையவர்களாக இருக்கின்றனர். அப்பொருளை பொறுப்பேற் கின்றவர்களோ அதனைப பாதுகாப்பதற்காக எப்பொழுதும் அப்பொருள் இருக்கும் இடத்திலேயே இருப்பதில்லை. அத்தகைய பாதுகாப்பினை அவர்களினால் செய்யவும் முடியாது. ஆனால் மக்கள் அவர்களில் தேவையுடையவர்க ளாகவே உள்ளனர். இந்நிலையில் ஒப்படைக்கப்பட்ட பொருள் ஒப்படைக்கப்பட்டவரிடம் இருக்கும் வேளையில் அழிந்துவிட்டால் பொருளுக்கு உரிமையுடையவர்களே பொறுப்பு எனின் அது அநீதமானது; மக்களுக்குச் சிரமமானது.

தமது பொருட்களை பிறரிடம் பாதுகாப்பதற்காக ஒப்படைப்பதை முற்றாக விட்டுவிடவேண்டும். அல்லது இத்தகைய செயற்பாடுகளில் ஈடுபட வேண்டும். ஆனால் பொருள் அழிந்துவிட்டதாகவோ காணாமற் போனதா கவோ அவர்கள் கூறுகின்ற போது நஷ்டத்தை இவர்கள் பொறுப்பேற்க வேண்டும். இதனால் செல்வம் அழிந்து விடுகின்றது. மட்டுமன்றி மோசடிகளுக்கும் இது வழியமைத்துவிடுகின்றது. எனவே ஒப்படைக்கப்பட்ட பொருள் காணாமற்போய் விட்டால் அல்லது அழிந்து விட்டால் பொருளை பாதுகாப்புக்காக பொறுப்பேற்ற வர்களே பொறுப்பாளிகள் என்பதன் மூலம் மக்கள் நன்மை யடைகின்றனர். இதனையே அலி (ரலி) அவர்கள் பொறுப்புடமை இன்றேல் மக்கள் நன்மை பெறமாட்டார்கள் எனக் குறிப்பிட்டார்கள்.

மக்களது பொருட்களை பாதுகாப்புக்காக ஏற்றுக் கொள்கின்றவர்களே அவற்றிற்குரிய பொறுப்பாளிகள் என்பதற்கோ அதனை மறுப்பதற்கோ ஷரீஆவில் எதுவித ஆதாரமும் கிடையாது. ஆனால், அழிந்த பொருட்களுக்கான பொறுப்பு அதனை ஏற்றவர்களையே சாறுகின்றது எனின் அது சமூகத்தில் தனிமனித நலனையோ நன்மையையோ விட பொது நன்மையை, நலனையே அதிகம் தோற்றுவிக்கின்றது. இதனை கலீபாக்கள் உறுதிப்படுத்தியும் உள்ளனர். பொருட்கள் ஒப்படைக்கப்படுகின்றவர்களே அதற்கு

பொறுப்பாளிகள் என்ற தீர்ப்பைப் பெறுவதற்குரிய ஆதாரமும் இதுவேயாகும். இத்தகைய தீர்மானம் தீர்ப்பு நடவடிக்கை பிரத்தியோகமாக, தனிநபர் ஒருவரின் நலனைவிட பொது நலனுக்கு நன்மை முக்கியத்துவம் கொடுப்பது ரஸூல் (ஸல்) அவர்களது செயற்பாட்டுக்கு நடத்தைக்கு பொருத்தமான தாகும். அவரது தீர்ப்பை முன்மாதிரியாகக் கொண்டதாகும். நகர்புறத்தில் உள்ளவர்கள் அங்குள்ள பொருட்களை நகர்ப்புறங்களுக்கு எடுத்துச் சென்று வியாபாரம் செய்வதனை தடுத்தார்கள். அவ்வாறே நகர்ப்புறங்களை நோக்கி வந்துகொண்டிருக்கும் வியாபாரக் குழுக்களை இடைமறித்து அவர்களுக்கு பொருட்களை விற்பதனையும் அவர்களிடம் பொருட்களை வாங்குவதனையும் தடுத்தார்கள். தனிநபர் பெறும் நலனைவிட பொது நலனைக் கருத்திற் கொண்டே நபி (ஸல்) அவர்கள் இதனைத் தடுத்தார்கள்.

2. அல் குர்ஆன் ஒரே நூலாக தொகுக்கப்படாது அது சிறிய சிறிய பகுதிகளாக காணப்பட்டவேளை ஒன்று சேர்க்கப்பட்டு ஒரே நூலாக தொகுக்கப்பட்டமை மஸாலிஹுல் முர்ஸலுக்கு ஓர் உதாரணமாகும். அது அபூபக்கர் (ரலி) காலத்திலேயே ஒன்று சேர்க்கப்பட்டு தொகுக்கப்பட்டது. அதில் அனைத்து ஸஹாபாக்களும் உடன்பட்டார்கள். எனவே, அல் குர்ஆன் ஸஹாபாக்களிடத்தில் தனித்தனி சூறாவாகவும் பகுதி பகுதியாகவும் பிரிந்து காணப்பட்டபோது அது ஒன்று திரட்டப்பட்டு எழுதப்பட்டு நூலுருவில் கொண்டுவரப்பட்டது மஸாலிஹுல் முர்ஸலாகும். ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் அவை ஒன்று சேர்ந்து தொகுக்கப்பட வேண்டும் என்பது பற்றி பணிக்கவுமில்லை; அவ்வாறு என்றும் செய்யக் கூடாது என்று தடுக்கவுமில்லை. அவ்வாறு ஒன்று சேர்க்கப்பட்டு தொகுக்கப்பட்டமை இஸ்லாத்துக்கும் சமூகத்திற்கும் நன்மை பயக்கக் கூடிய ஓர் அம்சமாகும். எனவே தான் அல் குர்ஆனை ஒன்று சேர்த்து நூலுருவில் கொண்டு வந்தார்கள். கடன் கொடுக்கல் வாங்கலின் போது அது மறதியினாலோ அல்லது கடன் பெற்றவர் மறுத்துவிடுவதனாலோ வீணாகி விடாமல் இருப்பதற்காக எழுதிக் கொள்ளுமாறு நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள். இந்த அம்சத்துடன் அல் குர்ஆன் தொகுக்கப்பட்டமைக்கான காரணம் தொடர்புறுகின்றது.

எனவே மனித சமூகத்தின் சிறப்புக்கும் பூரணத்துவத்துக்கும் ஊற்றுக் கண்ணாயுள்ள அல்லாஹ்வின் வேத நூலை இஸ்லாமிய சமூகத்தில் உள்ள மனனமிட்ட தனி மனிதர்கள் மறந்துவிடுவதன் மூலம், மரணிப்பதன் மூலம் அது அழிந்துவிடாதிருக்க ஒன்று சேர்த்து எழுதி நூலுருவில் பாதுகாக்கப்படுவது மிக மேலானது.

3. குற்றம் புரிந்தவர்களுக்கு கசையடி கொடுப்பது இவற்றில் உள்ளதாகும். இவ்விடயத்தில் இமாம் மாலிக் உட்பட இஸ்லாமிய சட்ட மேதைகள் அனைவரும் உடன் பட்டுள்ளனர்.

4. செல்வந்தர்களிடம் பணம் அறவிடுவதற்கென ஒரு இமாமை நியமித்தல்: அதாவது பைத்துல்மாலில் பணம் முடிவுற்று ஜிஹாதுக்கான செலவுகளையோ நாட்டின் சமூகத்தின் பாதுகாப்புக்கான தேவைகளையோ நிறைவேற்ற முடியாத போது அவர் பைதுல்மாலின் தேவைகளை நிறைவேற்று வதற்காக செல்வந்தர்களிடம் பணம் அறவிடுவார்.

5. சில குற்றங்களுக்குறிய தண்டனையாக பணம் அறவிடுதல் இதற்கு ஷரீஆ மூலாதாரங்களில் எதுவித ஆதாரமும் இல்லாத போதிலும் அதனை அரசு தீர்மாணித்து அறவிடுதல்.

6. தனது தேவைகளை அடைந்து கொள்வதற்கும் நிறைவேற்றுவதற்கும் தேவையான பணத்தை ஹலாலான முறையில் பெற்றுக் கொள்வதற்கு எதுவித வழியும் இல்லாத போது தனது தேவைக்குப் போதுமானளவு மாத்திரம் ஹராமான பணத்தில் இருந்து பெற்றுக் கொள்ளல்.

7. ஒருவருக்காக ஒரு குழுவைக் கொலை செய்தல். அதாவது பலர் ஒன்று சேர்ந்து ஒரு தனிமனிதனைக் கொலை செய்தால் அவர்கள் அனைவருக்கும் கொலைத் தண்டனை நியமித்தல்.

8. இஸ்லாமிய சமூகத்தின் இமாமாக இருப்பதற்குரிய பண்புகள் தகுதிகள் உடைய எவரும் இல்லாத போது தகுதிகள் அற்றவர்களுள் சிறந்த ஒருவருக்கு பைஅத்துச் செய்தல்.

இத்தகைய இதே அமைப்பே நீதிபதிகளை நியமிப்பதிலும் கருத்திற் கொள்ளப்படும். மாறாக தகுதியான எவரும் இல்லையென்பதனால் யாரையும் நியமிக்காதிருப்பது நாட்டில், சமூகத்தில் வழிகேடுகளும் தீமைகளும் பரவுவதற்கு வழிவகுக்கும்.

எனவே, இத்தகைய உதாரணங்களை இமாம் ஷாதிப் அவர்கள் மிகத் தெளிவாகவும் விபரமாகவும் குறிப்பிட்டுள்ளார்கள்.அவற்றிற் சிலவற்றை கீழே தருகிறோம்.

1. இன்று பள்ளிகளிலே மிஹ்ராப்புகள் அமைக்கின்றனர். இதனை நபி (ஸல்) அவர்கள் அனுமதித்ததற்கோ தடுத்ததற்கோ எதுவித ஆதாரமும் கிடையாத போது அதனை பள்ளியில் அமைத்தல்: பிற்பட்ட காலத்தில் பள்ளிகளில் கிப்லாவின் திசையை அறிந்து கொள்ளக் கூடிய எதுவித அடையாளமும் இல்லாதிருப்பது முஸ்லிம்களுக்கு ஒருவித சிக்கலானதாக இருப்பதனை மக்கள் அவதானித்தனர். எவரேனும் புதிதாக பள்ளியினுள் நுழைந்தால் அவர் தொழுவதற்காக கிப்லாவின் திசையை ஏனையவர்களிடம் கேட்க வேண்டிய நிர்ப்பந்த நிலைக்கும் உள்ளானார். எனவே கிப்லாவின் திசையை அறிந்து கொள்ளும் வகையில் ஏதாவது ஒரு அடையாளத்தை பள்ளியினுள் வைப்பது சிறப்புமிக்க பிரயோசனமானது எனக் கண்டனர். ஆகவே பள்ளியினுள் கிப்லாவின் திசையில் உள்ள சுவரில் கிப்லாவின் அடையாளமாக குடையப்பட்ட ஒரு வளைவான பகுதியை ஏற்படுத்தி அதற்கு மிஹ்ராப் எனப் பெயரிட்டனர். இத்தகைய நலன்மிக்க விடயத்தில் உள்ள தொடர்பு, ஷரீஆவில் கஷ்டங்கள் துன்பங்களை நீக்குவதற்கும் தடுப்பதற்கும் ஆதாரங்கள் வந்துள்ளன என்பதாகும்.

2. குத்பா பிரசங்கங்கள் நிகழ்த்தப்படும் போது அவை மக்களுக்கு கேட்கும் அளவுக்கு அவர்களது தேவைக்கேற்ப மின்பர்களை உயர்த்தி அதற்கேற்ப படிகளை அமைத்தல்.

3. குத்பா பிரசங்கங்களை நிகழ்த்துபவர்களும், ஆசிரியர்களும் ஏனைய நற்போதனைகளை செய்கின்றவர்களும் தாம்

கூறக்கூடியவற்றை பேசக்கூடியவற்றை அனைத்து மக்களும் கேட்பதற்காக ஒலிபெருக்கிகளை அமைத்தல்.

4. கலைகளைத் தோற்றுவித்து அதற்கான அடிப்படைகளையும் விதிமுறைகளையும் அமைத்தல், ஹதீஸ்கலை அதற்கான அடிப்படைகள்; இஸ்லாமிய சட்டக்கலை அதற்கான அடிப்படைகள்; மொழிகள் அவற்றிக்குரிய இலக்கண இலக்கியங்கள் போன்றன அமைக்கப்பட்டுள்ளன. இது போன்று இதர கலைகளுக்கும் அமைத்தல்.

5. தானியங்களை அரைத்து தூய்மைப்படுத்துவதற்கான இயந்திரங்களை உபயோகித்தல்.

6. புகையிரதங்கள், வாகனங்கள், விமானங்கள், கப்பல் போன்ற நவீன போக்குவரத்துச் சாதனங்களைப் பயன்படுத்தல் அவற்றில் பிரயாணம் செய்தல்.

7. போதியளவு புத்தகங்களை அவசரமாக அச்சிட்டு வெளியிடுவதற்குரிய இயந்திரங்களைப் பயன்படுத்தல்.

மேற்குறிப்பிட்டவைகளும் இவையல்லாத இன்னும் இது போன்ற ஏராளமான அம்சங்களும் ஷரீஆவில் அதாவது அல் குர்ஆன், சுன்னா, இஜ்மா போன்வற்றில் ஏற்றுக் கொள்ளப்பட்டதற்கோ மறுக்கப்பட்டதற்கோ எதுவித சான்றுகளையும் காணமுடியாது. ஆனால் இவையனைத்தும் மஸாலிஹுல் முர்ஸலாவைச் சேர்ந்தவையாகும். இவைகள் அனைத்திலும் தனிப்பட்ட நன்மைகளைவிட பொது நன்மைகளை கருத்திற் கொள்ளல் சிறிய தீமைகளைக் கொண்டு ஒரு பெரும் தீமையைத் தடுத்தல், தீமைக்கு வழிகாட்டும் அடித்தளமாக உள்ள விடயங்களைத் தடுத்தல், ஒரு கடமை நிறைவேறத் தேவையான பிற அம்சங்கள் கடமை என்ற உணர்வு போன்ற அம்சங்கள் உள்ளடக்கியிருக்கின்றன. இவைகள் ரஸூல் (ஸல்) அவர்களது நடவடிக்கைகளுடன் தொடர்புடையனவாகும். இவைகள் மார்க்கத்தில் புதிதாக தோற்றுவிக்கப்பட்டவை என்று கருதமுடியாது. பித்அத்வாதிகள் தங்களது பித்அத்தான செயற்பாடுகளை உறுதிப்படுத்துவதற்காகவும், அவற்றை முஸ்லிம்களுக்கு மத்தியில் நிலைக்கச் செய்வதற்காகவும், ஊடுருவச் செய்வதற்காகவும் மேற்குறிப்பிட்டவற்றை ஆதாரமாக எடுத்த

போதிலும் அவை பித்அத்துகளன்று. இருந்தும் அதிகமான முஸ்லிம்கள் இத்தவறில் விழுந்துவிடுகின்றார்கள் என்பதுதான் கவலைக்குரிய விடயமாகும். பித்அத்தையும் மஸாலிஹ் முர்ஸலைப் போன்றது என்றே எண்ணுகிறார்கள். இத்தகைய கருத்தோட்டத திற்கும் இத்தவறில் மனிதர்கள் விழுந்து விடுவதற்கும் சுன்னாவையும் பித்ஆவையும் அவையிரண்டுக்குமிடையில் உள்ள வேறுபாட்டி னையும் விளங்கிக் கொள்ளாமையே காரணமாகும். எனவே சுன்னா, பித்ஆ பற்றிய விளக்கத்தை திரும்பவும் மீட்டிப்பார்ப்பது மேலும் அவற்றை தெளிவாக விளங்கிக் கொள்ளவதற்கும், சிந்தனைக்கும் அதுபற்றி எச்சரிக்கையாக இருப்பதற்கும் துணைபுரியும். சுன்னா என்பது அல்லாஹ்வின் அனுமதியுடன் ஷரீஅத்தாக்கப்பட்ட ரஸூல் (ஸல்) அவர்களது சொல், செயல், அங்கீகாரம் என்பனவாகும். சுன்னா மனி தனது இம்மை மறுமை வாழ்க்கையை சீர்படுத்துகின்றது. அவனது உடலையும், ஆத்மாவையும் சீர்படுத்துகின்றது. உள்ளத்தை தூய்மைப்படுத்துகின்றது. மனிதனது பண்புகளை நெறிப்படுத்தி சீர்படுத்துகின்றது. மேலும் சுன்னா உள்ளத்தை தூய்மைப்படுத்துவ துடன் அதனை சீர்படுத்தி அதில் பெரும் தாக்கத்தையே ஏற்படுத்தும் இறை வஹியாகும்.

பித்ஆ சுன்னாவுக்கு நேர் முரணானதாகும். அது அல்லாஹ்வின் அனுமதியுடன் ஷரீஅத்தாக்கப்பட்டதன்று. அது மனிதனால் இயற்றப்பட்டது. ஷரீஆவுக்கு மாற்றமாக அதனை மறுக்கும் வகையில் புதிதாக தோற்றுவிக்கப்பட்டது. அதனை வணக்கமாக நோக்கு கின்றனர். அவை அல்லாஹ்விடத்தில் திருப்பொருத்தத்தையும் நற்கூலியையும் பெற்றுத்தரும் என்று நம்பிக்கை கொண்டுள்ளனர். மேலும் அவை மனிதனுக்கும் இறைவனுக்குமிடையில் நெருக்கத்தையேற்படுத்துகின்றன என்று எண்ணுகின்றனர். அல்லாஹ் அனுமதித்த ஷரீஅத்தாகிய அம்சங்களில் உள்ள எந்த ஒரு பிரதிபலனையும் தாக்கத்தையும் பித்அத்தான அம்சங்களில் காண முடியாது. இதனால் அதன் மூலம் மனிதன் எதிர்பார்க்கின்ற எந்த ஒன்றையும் இவற்றால் அடைந்து கொள்ள முடியாது. இதற்கு கீழ்க்காணும் நபி மொழி சான்று பகர்கின்றது.

**''எவர் ஒருவர் நாம் ஏவாத ஒன்றைச் செய்கின்றாரோ அது மறுக்கப்பட்டதாகும்.''**

அதாவது எவன் ஒரு பித்அத்தைக் கொண்டு செயற்படுத்து கின்றானோ அச்செயலை அல்லாஹ் ஏற்றுக் கொள்ள மாட்டான். அல்லாஹ் ஏற்படுத்தியிருக்கின்ற ஷரீஅத்தாகிய வணக்கவழிபாடுகளில் இதர செயற்பாடுகளில் உள்ள உளத்தூய்மை இதில் காணப்படமாட்டாது. உள்ளத்தில் தாக்கத்தையேற்படுத்துகின்ற சக்தி இதற்குக் கிடையாது. இதனால் அதற்கு நற்கூலி அளிக்கப்படவும்மாட்டாது. அது ஏற்றுக்கொள்ளப்படவும் மாட்டாது.

எந்த ஒரு வணக்கமாயினும் சரி அதனது பர்ளுகள் கடமைகள், சுன்த்துகள், ஒழுங்குமுறைகள், நிபந்தனைகள் அனைத்தும் பூரணமடைகின்ற போதுதான் அது சரியானது. இவற்றில் ஏதாவது ஒன்று விடுபடுகின்றபோது அது பிழையானது. இந்த அம்சத்தில் எந்த ஒரு முஸ்லிமிடம் மாற்றுக் கருத்து இருக்க முடியாது. இத்தகைய கருத்துகளும் கூட பித்அத்கள் கூடாது என்பதனை உறுதிப்படுத்து கின்றன. எந்த ஒரு அம்சமாயினும் சரியானது என்கின்ற போது அது ஏற்றுக் கொள்ளப்படும்; செய்தவனுக்கு நற்கூலி கொடுக்கப்படும் என்பதாகும். ஏனெனில் அது உள்ளத்தை தூய்மைப்படுத்துகின்றது. அதனைப் பரிசுத்தப்படுத்துகின்றது. உள்ளத்தை தூய்மைப்படுத்த வேண்டும் பரிசுத்தமாக்க வேண்டும் என்று எதிரர்பார்க்கப்படுகின்ற பிரதிபலனை எச்செயல் கொடுக்கத் தவறுகின்றதுவோ அது பிழையானதாகும். எனவேதான் அது ஏற்றுக் கொள்ளப்படவும் மாட்டாது. செய்தவனுக்கு நன்மையளிக்கப்படவு மாட்டாது. இன்னோர் அம்சத்தையும் விளங்கிக் கொள்ள வேண்டும். வணக்கம் என்பது அல் குர்ஆன் சுன்னா கூறியதாயினும் ரஸூல் (ஸல்) அவர்கள் செய்த முறைக்கு ஏற்றதாக சரியாக நிறைவேற்றப்பட்டால்தான் எதிர்பார்க்கின்ற பிரதிபலன் கிடைக்கும். மாற்றமாக செய்கின்றபோது எதிர்பார்க்கப்படுகின்ற பிரதிபலன் கிடைக்கமாட்டாது. குறிப்பிட்ட பிரதிபலன் கிடைக்க வேண்டுமாயின் பின்வரும் முக்கிய நான்கு விடயங்கள் கவனத்திற் கொள்ளப் பட வேண்டும்.

1. **எண்ணிக்கை**
2. **செய்முறை**
3. **காலம் அல்லது நேரம்**
4. **இடம்**

மேற்குறிப்பிட்ட இவற்றில் ஏதாவது ஒன்று தவறிவிடுகின்றபோது குறிப்பிட்ட செயல் பிழையானதாகவே கணிக்கப்படுகின்றது. இதற்கு சில உதாரணங்களை இங்கு குறிப்பிடுவது இதனை இங்கு மேலும்

தெளிவாக புரிந்து கொள்வதற்கு துணைபுரியும்; ஒருவன் சுயநினைவுடன் மறதியின்றி தொழுகையில் ரக்அத்துகளின் எண்ணிக்கையை கூட்டுகின்ற போது அல்லது குறைக்கின்றபோது குறிப்பிட்ட அத்தொழுகை பிழையானதாகும். ஏனெனில் சுன்னாவில் வரையறுத்துக் கூறப்பட்டுள்ள அதனது எண்ணிக்கை தவறிவிடுகின்றது. அல்லது ஒருவர் தொழுகையில் ருகூஉக்கு முன் ஸுஜூது செய்தால் அல்லது முதல் தக்பீருக்கு முன் சூறா பாதிஹாவை ஓதுதல் போன்ற முறையில் முன் செய்ய வேண்டியவற்றை பிற்படுத்துவதனால் குறிப்பிட்ட அச்செயல் வணக்கம் பிழையானது. ஏனெனில் அது சுன்னா சொல்லித் தருகின்ற செய்முறைக்கு மாற்றமானது. அவ்வாறே குறிப்பிடப்படாத நேரங்களில் தொழுகையை நிலைநாட்டுதல் பொருத்தமற்ற இடங்களில் நிறைவேற்றுதல் போன்ற காரணங்களினால் அது தவறானதாகும்.

அல்லாஹ் ரமளான் மாதத்தில் நோன்பு நோற்பதனை கடமையாக்கியுள்ளான் என்பது எல்லோரும் அறிந்த விடயம். இவ்வாறு இருக்க இம்மாதத்தைவிட ஒருநாள் முற்படுத்தியோ பிற்படுத்தியோ அல்லது ஏனைய ஒரு மாதத்திலோ நோன்பு நோற்றால் அது தவறானது; பிழைானது, ஏனெனில் இது குறிப்பிடப்பட்ட காலத்துக்கு முரணானது. அவ்வாறே ஹஜ்ஜின் போது அரபாவில் தரித்தல் ஓர் முக்கிய அம்சமாகும். அரபாவுக்கு என வரையறுக்கப்பட்ட இடம் இருக்கும் போது அதற்கு வெளியே தங்குவதனால் வரையறுக்கப்பட்ட 9ஆம் நாள் தவிர்த்து ஏனைய நாட்களில் தங்குவதனால் ஹஜ் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது. அவ்வாறே கஃபா அல்லாத வேறொன்றை வலம் வருதல் அல்லது ஸஃபா மர்வாவுக்கு இடையிலன்றி வேறு இரண்டு இடங்களுக்கிடையில் ஓடுதல் வலம் வருதல் போன்றவகையில் இடம் மாறுவதனாலும் அச்செயல்கள் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது. இவ்வாறே ஏனைய இதர வணக்க வழிபாடுகளிலும் செயல்களிலும் எண்ணிக்கை, இடம், காலம், நேரம், செய்முறை போன்ற அம்சங்களில் ஏதாவது ஒன்று அல் குர்ஆன், சுன்னா வரையறுத்ததற்கு மாற்றமாக அமைகின்றபோது அது பிழையானதாகும்.

சுன்னாவுக்கும் பித்ஆவுக்குமிடையில் உள்ள வேறுபாடுகளை இன்னும் தெளிவாக விளக்க முடியும். சுன்னா அல்லாஹ் ஷரீஅத்தாக்கியது; இறுதித் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் மொழிந்தது; செயல் முறையில் கொண்டு வந்தது; பிறர் செய்ய அவர்

அங்கீகரித்தது. பித்ஆ ஷைத்தான் ஒரு செயலை அழகு படுத்திக் காட்டியதன் மூலம் மனிதனால் உருவாக்கப்பட்டது. சுன்னா ஒரு செயல் நிறைவேற்றப்படுகின்ற போது அது ரஸூல் (ஸல்) அவர்களது செய்முறையுடன் உடன்பாடானதா என்று அவதானித்து நிறை வேற்றப்படும் செய்முறையாகும். அல்லது வணக்கமாகும். இதனால் மனித உள்ளத்தை தூய்மைப்படுத்தும் சிறந்த சக்தி அதற்குண்டு. அது சிறந்த பிரதிபலனாகும். பித்ஆ அல்லாஹ்வின் மீதும் அவனது தூதர் மீதும் இட்டுக்கட்டப்பட்ட ஒரு பழியாகும். அது மார்க்கத்தில் குறை கற்பிப்பதாகும். அது சிறந்த பிரதிபலனை பெற்றுத்தரும் அளவுக்கு எண்ணிக்கையிலோ, செயல்முறைகளிலோ, இடத்திலோ, காலத்திலோ தங்கிநிற்கக் கூடியதுமன்று. அதனது முடிவுகள் எப்போதும் தீமையானதாகவும், இருள்மிக்கதாகவும் உள்ளத்தை மாசுபடுத்தக் கூடியதாகவுமே உள்ளன. இதனால்தான் சுன்னா நேர்வழியானதாகவும் பித்ஆ வழிகேடானதாகவும் உள்ளன.

## *பெரிய சிறிய பித்அத்துக்களிற் சில:*

முஸ்லிம்கள் பித்அத்துகளை இனங்கண்டு கொள்வதற்காகவும், அவற்றைவிட்டு விலகி தூரமாகி இருப்பதற்காகவும் எச்சரிக்கையாக பித்அத்துகளில் சில பிரிவுகளை இங்கே குறிப்பிடுவது பொருத்தமானதாகும்.

### *1. அடிப்படைக் கொள்கைகளுடன் தொடர்புள்ள பித்அத்துகள்*

1. விதியை மறுத்தல்; அவ்வாறே பிரபஞ்ச அமைப்புக்கள் அதனுடன் தொடர்புடைய ஏனைய பகுதிகள் பற்றிய அல்லாஹ்வின் அறிவை மறுத்துரைத்தல்.

2. அல்லாஹ் தனக்குப் பொருத்தமான முறையில் வர்ணித்துள்ள அவனது பண்புகளை மறுத்தல். அதனது எதார்த்தபூர்வமான கருத்துக்களையும் மறுத்து அவனது பண்புகளுக்கு விளக்கமளித்தல்.

3. கப்றில் வேதனைகள் அல்லது அருட்கொடைகள் உண்டென்பதனையும் அடக்கப்பட்டவனிடம் இரண்டு மலக்குகள் வருவார்கள் என்பதனையும் மறுத்தல்.

4. ரஸூல் (ஸல்) அவர்களது தோழர்களை (ஸஹாபாக்களை) நிராகரித்து குற்றம் சாட்டி அவர்களில் சிலரை குறைவாகவும் இழிவாகவும் மதித்தல்.

5. அவ்லியாக்கள் மறைவானவற்றை அறிகின்றார்கள், அவர்கள் நபிமார்களைவிட மேலானவர்கள் என்ற நம்பிக்கை கொள்ளல்.

6. நற்ஸாலிஹான மனிதர்களுக்கென ஓர் அமைப்பு மத்தியத்தலம் உள்ளது. கொடுத்தல், தடுத்தல், நியமித்தல், நீக்குதல் போன்ற இதர பிரபஞ்ச செயற்பாடுகளையும் வாழ்க்கை ஓட்டங்களையும் உலக நிகழ்வுகளையும் தீர்மானிக்கப்படுவதற்கென அதிலே அவர்கள் ஒன்று கூடுகின்றார்கள் என்ற நம்பிக்கை கொள்ளல்.

7. அவ்லியாக்கள் மரணத்ததிற்குப் பிறகு அவர்களது கப்றுகளைத் தரிசித்து அவர்களிடம் சிபாரிசு வேண்டுகின்றவர்களது, வஸீலா தேடுகின்றவர்களது தேவைகளை அவர்களது ஆத்மாக்கள் நிறைவேற்றிக் கொடுக்கின்றன என்று நம்பிக்கை கொள்ளல்.

8. அவ்லியாக்களுக்காக நேர்ச்சைகள் வைப்பது, அவர்கள் அடக்கப்பட்ட இடங்களில் அவர்களது ஆத்மாக்களுக்காக பலியிடுவது என்பன செய்தல்.

9. அவ்லியாக்களிடம் துஆக் கேட்டல்; அவர்களிடம் உதவி தேடுதல்; அவர்களது அடக்கஸ்தலங்களில் இஃதிகாப் இருத்தல்; நோய்க்கு அவர்களிடம் நிவாரணம் வேண்டி நோயாளர்களை அடக்கஸ்தலங்களுக்கு அழைத்துச் செல்லல்.

மேற்குறிப்பிட்ட அடிப்படைக் கொள்கையுடன் நம்பிக்கையுடன் தொடர்புடைய பித்அத்துகளை செய்கின்ற நம்புகின்ற மக்களை அவை நிராகரிப்புக்கு இட்டுச் செல்கின்றன; பாவியாக்கி விடுகின்றன. எனவே உடனடியாக அவற்றிலிருந்து அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோர வேண்டும். எவர் அவற்றில் ஏதாவது ஒன்றில் பிடிவாதமாக இருந்து அதிலேயே மரணித்து விடுகின்றாரோ அவர் நிராகரிப்பிலும், பாவத்திலும் மரணிக்கின்றார். அல்லாஹ் எம்மைப் பாதுகாப்பானாக.

10. பொதுவாக பிறந்த தினங்களைக் கொண்டாடுவதும் பித்அத்தாகும்.

### *2) வணக்க வழிபாடுகளில் உள்ள பித்அத்துகள்:*

***சுத்தம்***

1. காலுறைக்கு மேலால் மஸ்ஹு செய்வதனை மறுத்தல், இது பாவியாக்கக்கூடிய ஒரு பித்ஆவாகும்.

2. காலுறையோ ஏனைய மறைவுகளோ இல்லாத போது காலைக் கழுவாது நீரைக் கொண்டு தடவிக் கொள்வதுடன் போதுமாக்கிக் கொள்ளுதல்; இதுவும் பாவியாக்கக்கூடிய பித்ஆவாகும்.

3. வுளூஉ செய்யும் போது கழுத்தை மஸ்ஹு செய்தல்.

4. தண்ணீரை வீண்விரயம் செய்தல்.

5. வுளூஉடைய ஒவ்வொரு உறுப்பினையும் கழுவும் போது தனியான துஆக்களை ஓதுதல்.

6. வுளூவின் போது கிப்லாவை முன்னோக்குதல்; அதனது திசையைத் தேடுதல்; உறுதிப்படுத்தல்; அதனை முன்னோக்குவ்தாக நாடுதல்.

## தொழுகை

1. முதல் தக்பீரின் போது இரண்டு தோற்புயங்கள் வரை கையை உயர்த்தாது விடுதல்.

2. ருகூஇலும், ஸுஜூதிலும், நிலையிலும் அமைதி கொள்ளாதிருத்தல்.

3. தொழுகையில் ஒரு செயலில் இருந்து மற்றொரு செயலுக்கு செல்கின்றபோது தக்பீர்களையும் ஏனையவற்றையும் இமாம் அல்லாத ஏனையவர்கள் சப்தமிட்டுச் சொல்லுதல்.

4. தொழுகை முடிந்து ஸலாம் கொடுத்ததும் முஸாபஹா செய்தல்.

5. தொழுகைக்குப் பின் கூட்டாக இருந்து சப்தமிட்டு துஆக்களையும், திக்ருகளையும் செய்தல்.

## ஜனாஸா

1. ஜனாஸாவை நிலத்தில் வைத்துவிட்டு இந்த உங்களது சகோதரனைப் பற்றி நீங்கள் என்ன கூறுகின்றீர்கள் என்று ஒருவர் கேட்க ஏனைய மனிதர்கள் அனைவரும் அவருக்கு சான்று பகர்தல்.

2. ஜனாஸாவை சுமந்து செல்லும் போது 'லாஇலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுன் ரஸூலுல்லாஹ்' என்ற வார்த்தைகளையும் ''வஹ்தஹு'' என்ற வார்த்தையையும் உரக்க சப்தமிட்டுக் கூறுதல்.

3. ஜனாஸாவுக்கு முன்னால் இருந்து கொண்டு இரங்கட்பாக்களையும் (கவலை தெரிவிக்கும் பாடல்களையும்) புர்தாக்களையும் படித்தல்.

4. அடக்கஸ்தலத்தில் கூட்டாக இருந்து இறந்தவருக்காக அல்குர்ஆனை ஓதுதல்.

5. இறந்தவர் வீட்டில் இறந்ததற்காக அல்குர்ஆன் ஓதுதல், உணவளித்தல் மரணித்த இரவன்று கப்றுடைய இரவுச்சாப்பாடு என்றும் மூன்றாம் இரவு, ஏழாம் இரவு, நாற்பதாம் இரவு என்றும் பெயரிட்டு உணவளித்தல்.

6. கப்றுக்கு மேலால் கட்டுதல், அதற்குமேல் இறந்தவரது போட்டோவை வைத்தல் அல்லது பூக்களை வைத்தல் போன்றன செய்தல் பாவியாக்கக் கூடிய பித்ஆவாகும்.

7. ஷஹீத்களின் ஆத்மாக்களுக்காக துக்கம் அனுஷ்டித்தல்.

8. பெண்கள் கப்றுகளை தரிசித்தல், அங்கு ஒன்று கூடி ஒப்பாரி வைத்தல், அழுதல், சிரித்தல், புறம் பேசுதல், தனது அழகை வெளிப்படுத்தல் போன்றவற்றுடன் வியாபாரத்திலும் ஈடுபடு கின்றார்கள். இவையாவும் ஈடுபடுகின்றவர்களை பாவியாக்கக்கூடிய பித்ஆவாகும்.

## 3) கொடுக்கல் வாங்கல் நடவடிக்கையில் உள்ள பித்அத்துகள்:

### சட்டம்

1. அல்குர்ஆனும் சுன்னாவும் கூறுகின்ற தண்டனைகளுக்கு மாற்றமான தண்டனை சட்டங்களை அமைத்தல் அவதூறு, விபச்சாரம், களவு, மதுபானம், கொலை போன்றவற்றிற்கு இஸ்லாம் விதித்துள்ள தண்டனைகளை தவிர்த்து மனிதனால் நியமிக்கப்பட்ட தண்டனைகளை நிறைவேற்றல்.

2. ஸக்காத் கொடுக்கத் தகுதியானவர்களுக்கு அதிலிருந்து விதிவிலக்கு சலுகை கொடுத்தல். அவர்களிடமிருந்து ஸக்காத்தைப் பெறுவதில் கவனம் செலுத்தாதிருத்தல்.

3. நாட்டின் பொறுப்புக்களை நீதி, நேர்மையற்றவர்களிடம் கொடுத்துவிட்டு நீதி நேர்மையானவர்களை அதிலிருந்து நீக்கிவிடுதல்.

4. தீர்ப்புக்கள் வழங்குதவற்காக பெண்களை நியமித்தல், அவர்களை பதவிகளில் அமர்த்துதல். இது அவர்கள் பிற ஆடவருடன் கலந்து இருப்பதற்கும், தனித்திருப்பதற்கும் வழியமைத்துக் கொடுக்கின்றது.

5. முஸ்லிம்கள் மீது தேவையில்லாதபோது அநியாயமான வரிகளை விதித்தல்.

6. இறந்த ஒருவனது சொத்துக்கு கடமையான வாரிசுகள் இருக்கின்ற போது அதில் அரசு பங்கெடுத்தல்.

### வியாபாரம்

1. உருவப்படங்கள், சிலைகள், மயக்கமூட்டக்கூடியவைகள், போதைப்பொருட்கள், கேவலமான அசிங்கமான உடைகள், செயற்கை முடிகள் போன்றவைகளை விற்பனை செய்தல். இது பாவியாக்கக்கூடிய பித்அத்தாகும்.

2. ஒரு பொருளை தனக்கு உரிமையாக்கிக் கொள்ளுமுன் அதனை விற்றல், அதனை ஏனைய நடவடிக்கைகளை மேற்கொள்ளல், இதுவும் பாவியாக்கக்கூடிய பித்அத்தாகும்.

3. ஒரு பொருளை கடனுக்கு விற்றுவிட்டு பின்பு அப்பொருளை விற்றவனே உடன் பணத்துக்கு விற்றவிலையை விட குறைந்த விலைக்கு திரும்பி வாங்குதல். இதுவும் பாவியாக்கக்கூடிய பித்ஆவாகும்.

***உடை, உணவு, பானம்***

1. இடது கையினால் உண்ணல், பருகல்.

2. உணவிலேயே திளைத்திருத்தல் (அதனையே நோக்கமாக கொண்டிருத்தல்).

3. உணவு, குடிபானம் போன்றவற்றின் வகைகளை எல்லைமீறி அதிகரித்துக் கொண்டும், நடந்து கொண்டும் சாப்பிடுதல்.

4. ஆண்களும், பெண்களும் பாதைகளிலும் கடைத்தெருக்களிலும் சுற்றித் திரிந்து கொண்டும், நடந்து கொண்டும் சாப்பிடுதல்.

5. மணமுடிக்காத ஆண்களும், பெண்களும் உண்ணுவதிலும் பருகுவதிலும் இரண்டறக் கலந்திருத்தல்.

***உடை***

1. காபிர்களுக்கு உடன்பாடாக இருக்கும் வகையில் அவர்களுக்கென்றே தனியாக உள்ள ''புர்னீதா'' என்ற தொப்பி போன்றதை அணிதல். அல்லாஹ் எம்மைப் பாதுகாப்பானாக!.

2. ஆண்கள் தங்க மோதிரம் அணிதல்; பலவீனமான யூதர்களும், நஸாராக்களும் உடன்பாடாகும் வகையில் தங்க மாலைகளை சிலர் தனது கழுத்திலே அணிந்து கொள்கின்றனர். இது பாவியாக்கக் கூடிய பித்அத்தாகும்.

3. அன்னிய ஆடவர்கள் பார்க்கின்றபோது தனது உடல் தெரியக்கூடியதாக மென்மையான ஆடைகளை பெண்கள் அணிதல்.

4. வயது முதிர்ந்த பெண்கள் அல்லாத ஏனைய பெண்கள் தனது முகத்தை திறந்த நிலையில் அந்நிய ஆடவர்களுக்கு மத்தியில் பாதைகளிலும் கடைத்தெருக்களிலும் நடமாடுதல். இதுவும் பாவியாக்கக்கூடிய பித்அத்தாகும்.

5. காபிர்கள், பாவிகள், வழிகெட்டவர்கள் தமக்கென தனியாக்கிக் கொண்டுள்ள ஆடைகளை முஸ்லிம் ஆண்கள் பெண்கள் அணிதல்.

இங்கு நான் குறிப்பிட்ட சில விடயங்கள் பற்றி அவை தடுக்கப்பட்டதற்கான ஆதாரங்கள் உள்ளன. இவற்றை நான் எதார்த்தபூர்வமான சேர்க்கப்பட்ட பித்அத்துகளுடன் இணைத்தே கூறியுள்ளேன். அவைகள் எதார்த்த பூர்வமான பித்அத்துகளாக இல்லாதிருந்த போதிலும் பித்அத்துக்குரிய நிபந்தனைகள் அதில் பொதிந்துள்ளன. ஏனெனில் அவை இஸ்லாத்தின் ஆரம்ப காலத்தில் சிறந்த சமூகத்தவர்களுக்கு மத்தியில் காணப்படவில்லை. எனவே புதியவைகள் ஹராமாக்கப்பட்ட மறுக்கப்படவேண்டிய பித்அத்துகளாகவே கருதப்படுகின்றன. எனவே அவை அனைத்திலிருந்தும் எச்சரிக்கையாக இருப்பதுவும் அவற்றை மறுப்பதுவும் தடுப்பதுவும் தூரமாக விலகியிருப்பதுவும் அவசியமாகும்.

மேற்குறிப்பிட்ட இந்த விடயங்கள் பற்றி இங்கு நான் எழுதியதன் நோக்கம் அனைவரும் அவற்றை அறிந்து கொள்ள வேண்டும் என்பதற்கு உரிய எச்சரிக்கையாகும். இந்த பயங்கரமான பித்அத்துகளில் இருந்து விடுபடுவது எவ்வாறு என்ற எவ்வித வழிகாட்டலும் இன்றி வாழும் நிலைக்கு முஸ்லிம்கள் தள்ளப்பட்டுள்ளனர். தனிமனிதர்களும் சமூகமும் அடையவேண்டிய பூரணத்துவத்தையும் பெற வேண்டிய நன்மைகளையும் விட்டு ஒதுங்கியுள்ளனர். இத்தகைய தீயவற்றில் இருந்து வெற்றி பெறும்வழி என்ன என்பது விடைகாண வேண்டிய வினாவாகும். இன்றைய முஸ்லிம் சமூகத்தில், அவர்களுக்கு மத்தியில் அல்குர்ஆனும், சுன்னாவும் இருந்தும் அவர்கள் இறைசட்டங்களை விட்டு தடுக்கப்பட்டவர்களாக உள்ளனர்.

# பித்ஆவிலிருந்து விடுபடும் வழிமுறை

பித்ஆவிலிருந்தும் அதன் தீய விளைவுகளில் இருந்தும் விடுபடுவதற்குரிய ஒரே வழி கொள்கை ரீதியாகவும் அறிவு ரீதியாகவும் செயல் ரீதியாகவும் அல்குர்ஆனையும், சுன்னாவையும் வாழ்க்கையில் கொண்டு வருவதாகும். இவையிரண்டையும் நடைமுறைக்குக் கொண்டுவரும் அப்பாதையில் கடினமான கஷ்டங்களும் தடைகளும் அவர்களை எதிர் கொள்ளும் இஸ்லாமிய சமூகத்தை தவறான வழிகாட்டல்களிலிருந்து தடுப்பதற்காகவும் அழிவிலிருந்தும், பித்னாக்களிலிருந்தும் பாதுகாப்பதற்காகவும் அந்த சமூகத்தில் உள்ள அறிஞர்களும் இஸ்லாமிய போதகர்களும் அல்குர்ஆன், சுன்னாவின் பக்கம் அழைப்பு விடுகின்றார்கள். பல முயற்சிகளை மேற்கொள்கின்றார்கள். சப்தமிட்டு அழைக்கின்றார்கள். ஆனால் சமூகமோ சகதியில் அமிழ்ந்து அவற்றின் கரைகள் அழுக்குகள் படிந்துள்ளன. இது அவர்களது அழைப்பைக் கேட்பதற்குத் தடையாக உள்ளது. அவர்களது பார்வை பலவீனமானது; சிந்தனைக்குரியது; அதனது பாவக்கறைகள் அவர்களுக்கு பெரும் சுமையாக உள்ளன. செயற்பாடுகள் மிகவும் குறைவாகவும் மெதுவானதாகவும் உள்ளன. அதனது பழைய பழக்கவழக்கங்களில் அது மூழ்கியுள்ளது. பாவங்களினால் அது அடகுவைக்கப்பட்டுள்ளது. இவ்வாறு நோய்களினால் இஸ்லாமிய சமூகம் பீடிக்கப்பட்டிருக்கும்போது அது எவ்வாறு சிந்திப்பது? எவ்வாறு நம்பிக்கை கொள்வது? எவ்வாறு உண்மைகளை அறிந்து கொள்வது சாத்தியமாகும்.? அதனடிப்படையில் எவ்வாறு செயற்பட முடியும்? இஸ்லாமிய சமூகம் அதனது இத்தகைய இழிவிலிருந்து விடுபடுவது எப்படி? ஆபத்துக்களிலிருந்து தன்னைப் பாதுகாத்து வெற்றி பெறுவது எப்படி? இதற்குரிய தீர்வு எங்குள்ளது?

எனவே இஸ்லாமிய சமூகத்தை இத்தகைய பேராபத்துக்களில் இருந்து விடுவிப்பதற்கு ஆக்கபூர்வமான ஒரு வழி இருப்பின் அது கீழ்காணும் திட்டத்தை அமுல்படுத்துவதில்தான் உள்ளது. அத்தகைய திட்டம் யாதெனில் வழிகேடுகளைத் தவிர்த்து உண்மையின் பக்கம் ஆசையூட்டும் வகையில் அதனை உறுதிப்படுத்தும் வகையிலான படிப்பினைகளை பரவவிடுதல் அல்லது எவ்வளவு சிரமப்பட்டா

யினும் பணத்தை செலவு செய்தாயினும் ஒவ்வொரு கிராமத்தை சேர்ந்தவர்களையும் அல்லது பிரதேசத்தை சேர்ந்தவர்களையும் அவர்களில் ஆண்கள், பெண்கள், சிறியவர்கள், பெரியவர்கள் அனைவரும் ஒன்று கூடக் கூடிய வசதியான அவர்களது பள்ளியில் அல்லது வேறு ஓர் இடத்தில் ஒவ்வொரு மஃரிப் தொழுகையின் பின் ஒன்று கூட வேண்டும். இது வருடம் முழுவதும் தொடர்ந்து நடக்க வேண்டும். இஸ்லாம் அனுமதித்த நியாயமான காரணமின்றி இதிலிருந்து எவரும் பின்வாங்கக் கூடாது. அங்குள்ள அனைவரும் அதிலிருந்து கொள்கைகள், இபாதத்துகள், பண்புகள், நன்நடத்தைகள் போன்றவற்றை அறிந்து விளங்கிக் கொள்ளும் வகையில் உண்மையான செயல்ரீதியான நடைமுறைகளையும் அல்குர்ஆன் சுன்னாவின் அறிவையும் அவர்களுக்கு கற்றுக் கொடுக்க வேண்டும்.

இந்த ஒரே ஒரு வழிமுறையின் மூலம் மாத்திரமே முஸ்லிம்கள் அல்குர்ஆனையும் சுன்னாவையும் உறுதியாகப் பற்றிப் பிடித்துக் கொள்வதற்கு வழி செய்யலாம். அப்போது அழிவுப் பாதையில் இருந்து அவர்கள் மீண்டு விடுவார்கள். இம்மையிலும் மறுமையிலும் வெற்றி பெற்று சீரடைவார்கள்.

யா அல்லாஹ்! அதனை அவர்களுக்கு உறுதிப்படுத்தி உதவியும் புரிவாயாக. தூதர்கள் அனைவர் மீதும் ஸலாம் உண்டாவதாக; உலகத்தாரின் இரட்சகனாகிய அல்லாஹ்வுக்கே புகழ் அனைத்தும்.

அல்ஹம்துலில்லாஹ்.

# حرمة الابتداع في الدين

تأليف

**الشيخ أبو بكر الجزائري**

ترجمة

**محمد عبد الصمد نستار**

اللغة التاميلية





# حرمة الابتداع في الدين

تاليف

الشيخ ابو بكر الجزائري

ترجمة

محمد عبد الصمد نستار

اللغة التاميلية


المملكة العربية السعودية

المكتب التعاوني للدعوة والإرشاد بأم الحمام - قسم الجاليات

تحت إشراف وزارة الشؤون الإسلامية والأوقاف والدعوة والإرشاد

ت: ٤٨٢٦٤٦٦ - فاكس ٤٨٢٧٤٨٩ - ص.ب ٢١٠٢١ الرياض ١١٤٩٧


